# சிவாஜி



## திருவாரூர்த் தமிழ்த் திருநாள்

தமிழ் வளர்ச்சிக்கழகத்தார் இரண்டாவது தமிழ்த் திருநாளை சென்ற 16, 17—4—49 இரண்டு நாட்களிலும் ஆரூர்த்தியாகேசர் சந்நிதியில் மிக விமரிசையான முறையில் கொண்டாடினார்கள். மக்களின் அன்புக்குப் பாத்திரமாக விளங்கும் மாஜி பிரதமர் ரெட்டியார் அவர்களின் தலைமையில் விழா முதல் நாள் தொடங்கியது. விஞ்ஞானம், பொருளாதாரம், இலக்கியம் ஆகிய பகுதிகளில் தனித்தனி நிகழ்ச்சிகளும், அறிஞர்களின் சொற்பெருக்குகளும் தமிழில் பல் துறை அறிவும் பெருகவேண்டுமென்ற ஆவலை வெளியிட்டன. லக்ஷோபலக்ஷம் மக்கள் திருவாரூரில் கூடியிருந்து தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செய்து மகிழ்ந்தனர். வடபாதி மங்கலம் மைனர் என்று கீர்த்திபெற்ற திரு. வி. எஸ் தியாகராஜ முதலியார் விழாவின் வரவேற்புக்கழக முதல்வராக இருந்து வெற்றிகரமாக விழாவை நடத்திவைத்தார். விஸ்தாரமான கல்லூரிக் கட்டிடத்தில் ஜில்லாக்கள் தோறுமிருந்து வந்த விருந்தினர் யாவர்க்கும் தனித்தனி விடுதி ஏற்பாடுகளும், ஓடி ஓடியுபசரிக்கச் சாரணர்களும், உணவு ஏற்பாடுகளும், ஸ்நான வசதிகளும யாவும் முதல் தரமானவை.

இந்த மாதிரி ஏற்பாடுகள் எங்கும் கண்டதில்லை யென்று அனைவரும் கூறி வியந்த வண்ணம் இருந்தனர். கமலாலயக் காட்சியும் தெருவெல்லாம் வரவேற்புத் தோரணங்களும் ஒலி பெருக்கியும் தமிழ்த் திருநாளை மகத்தான விழாவாகச் செய்தன. தமிழ்வளர்ச்சிக்கழக மகாநாடுதான் இது என்பதும் தமிழ் இன்னும் வளரக்கூடியதுதான் என்பதையும் எடுத்துக் காட்டக்கூடிய எழுத்துப்பிழையுள்ள வாசகங்கள் ஆங்காங்கு தோரணங்களாகத்திகழ்ந்தன என்பதையும் இங்கு குறிப்பிடலாம். ரேடியோ நிலயத்தினர் நிகழ்ச்சிகளைப் பதிவு செய்து தமிழ் மக்கள் அனைவரும் கேட்டு மகிழ உதவி செய்தனர். தமிழ் வளர்ச்சித் துறையில் புதிய நூல்களுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. கலைக் களஞ்சியம் புதிய நூல்களுக்கு உற்சாகம் ஆகியவை தமிழ்வளர்ச்சிக் கழக சாதனைகள். அடுத்த விழா கோவையில் நடைபெறுமென்று தெரிகிறது. தமிழ் வளர்ச்சிக் கழகம் மென்மேலும் வளர்ச்சியுற்று தமிழ் வளர்க்குமென்பதில் தடையில்லை.

## திருச்சியில் டாக்டர் ஆர். கே. எஸ்.

18—4—49-ல் மத்ய சர்க்கார் மாஜி நிதி மந்திரியும் உலகப்பொருளாதார நிபுணர்களில் சிறந்தவருமான டாக்டர் ஆர். கே. ஷண்முகம் செட்டியார் அவர்கள் திருச்சிக்கு விஜயம் செய்தார்.

**மில்காரர்கள் சங்கம்:-** திருச்சிஜில்லா மில்காரர்கள் சங்கத் திறப்புவிழாவை ஸ்ரீமநகர் கண்ணன் மில்ஸ் கட்டிடத்தில அவர் ஆற்றினர். இன்றைய வர்த்தகப் பொருளாதார நிலைமைகளின் ஏற்றத்தாழ்வுகளை விளக்கிக் கூறி விட்டு இன்று மக்கள் உணவு நெருக்கடியில் அவதியுற்றிருக்கும் நிலையில் மில் சொந்தக்காரர்களும் ரேஷன் வியாபாரிகளும் மண்ணும கல்லும் கலந்த அரிசியை மக்களுக்குப் பங்கிட்டுக்கொடுக்காமல் ஜீவகாருண்யத்துடன் தொழில் நடத்தி நாட்டுக்குச் சேவை புரிய வேண்டுமென்று கேட்டுகொண்டார். மாதிரி காட்டும் சரக்கைப் போல உயர்ந்தவற்றை இந்திய வியாபாரிகள் சப்ளை செய்வதில்லை என்ற அபகீர்த்தி உள் நாட்டிலும் வெளி நாட்டிலும் பரவி வருகிறது இதற்கிடங்கொடுத்தால் நம்முடைய வர்த்தகத்துறை கெட்டு விடுமென்று எச்சரித்து முதலாளிகள் தொழில் நலனையும், தொழிலாளர் பொதுமக்கள் நன்மையையும் காப்பதன் மூலம் தாங்கள் துறையை உயர்த்திக்கொள்ள வேண்டுமென்றும் கூறினர்.

**எழுத்தாளர் கூட்டம்:-** மாலை 4 மணிக்கு 'சிவாஜி" காரியாலயத்தின் நிர்வாகிகளான திருலோக சீதாராம், அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார் இருவரும் அளித்த வரவேற்பு வைபவத்தில் கலந்துகொண்டு எழுத்தாளர்களும் கலா ரஸிகர்களும் கூடிய அந்தக் கூட்டத்தில் தமிழ் இலக்கியச் சிறப்புப்பற்றி ஒரு அரிய சொற்பெருக்காற்றினர்.

**நகரசபை வரவேற்பு** தேவர் ஹாலில் திருச்சி நகர சபையார் அளித்த உபசாரத்தை ஏற்றுக்கொண்டு டாக்டர் ஆர். கே. எஸ். அவர்கள் ஆற்றிய சொற்பொழிவில் நகரசபை நிரந்தர ஊழியர்களுக்கும் நகரசபையில் பொதுமக்களின் பிரதிநிதிகளாக வீற்றிருப்பவர்களுக்கும் உள்ள தொடர்பைப்பற்றி விளக்கிக் கூறி நகர பரிபாலன விஷயமாகப் பல அரிய யோசனைகள் கூறினர்.

**தேவர் படத்திறப்பு:-** திருசசி நகர கூட்டுறவுப் பண்டகசாலையார் திருச்சி டவுன் ஹாலில் அளித்த வரவேற்பை ஏற்றுக்கொண்டு தேவர் படத்திறப்பு விழா ஆற்றினர்.



குழந்தை சுலோசனா

மார்பில் அணியும் மாமணி ஈதோ!
பேர்பெற்று வாழப் பெருஞ்செல்வம்!
பாரதி இசைத்த பச்சைக்குழந்தை
சோக்கத் தங்கச் சுலோசனா இங்கே
மிக்க வியப்பில் மூழ்கிய பூநிலை.
விண் தோடும் கற்பனைக் கடலில்
அற்புதச் சுலில் ஆடும் தேன்கரம்!
கண்களில் சிந்தும் கவிதை
நெஞ்சில் மலரும் நேசப்பூங்கோடி.
வாழ்வில் வந்த மரகதக்குழல்.
சாரதா தேவியின் சந்தனக்குஞ்சு!
கோதண்டராமரின் குமுதச்செல்வம்
முகப்பை வனப்புற முத்தோல்
காட்டும்
சுலோசனத்தாமரைச் சுகத்தடாகம்!

24-4-49 (சிறுவர் மலருடன்) விலை அணா 2




இருபத்தோராம் அத்தியாயம்

## வாரிசுப் போராட்டம்

வீரன் சிவாஜி மொகலாயர் சேனையை நேரடியில் ஒன்றும் செய்ய முடியாமல் மலைப் பிராந்தியங்களில் ஒளிந்து அது முன்னேறிச் செல்வதைப் பார்த்திருந்தான். தன்னைச் செயலற்றவனாகச் செய்துவிட்ட அந்த இடைக்காலத்தைக் குறித்து அவனுக்கு ஒருவித வேதனையுணர்ச்சியே எஞ்சியிருந்தது. எனினும் இந்த கோரமான வேதனைக்கிடையேயும் ஒருவித ஆவலும், என்ன நடக்கப் போகிறது, பார்க்கலாம், என்ற உத்வேகமும் இல்லாமற் போகவில்லை.

மொகலாயர் படையை நேரடியாகச் சென்று எதிர்ப்பது வீணென்பது சிவாஜிக்குத் தெளிவாகத் தெரியும். அவ்வளவு சக்தி அவன் அப்போது படைத்திருக்கவில்லை. உண்மையில் அவன் சிறப்புறச் சிங்காதனமேறிய பிற்காலத்திலும் அவனுக்கு இத்தகைய சந்தர்ப்பம் ஏற்படவேயில்லை என்று கூடச் சொல்லிவிடலாம்.

ஆனாலும் தன் சிறு ராணுவத்தையும், மொகலாயர் படையின் காம்பீர்யத்தையும் ஒப்பிட்டுப் பார்க்க சிவாஜிக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருந்தது. மொகலாயர் சேனை ஒரு முழுப் படையின் பொலிவோடு விளங்கியது. தன்னுடையதோ கொள்ளைக்காரர்களது சிறு படை போன்று, பூரணமான ஏற்பாடுகளேதுமின்றிக் கொரில்லாப் படையாக இருந்தது.

முக்கியமாக மொகலாயரது குதிரைப் படைக்கும், தன்னதற்கும் இருந்த பேதமே பயங்கரமாயிருப்பதைக் கண்டான் சிவாஜி. தன் வசம் போதுமான சேணங்கள் இல்லை. தன் படை வீரர் வெறும் குதிரைகளிலேறி அசௌகரியமான ஆசனங்களுடனே ஒளிந்து, ஒளிந்து போர் செய்தார்கள். சிவாஜிக்கு இது கொஞ்சம் வேதனையளித்தது. மேலும் தான் ஒன்றும் செய்யாமல் வெறுமனே வேடிக்கை பார்த்திருக்கும் நிலையும் சிவாஜிக்கு சற்று அதிருப்தி உண்டாக்கிற்று.

தீர ஆலோசனை செய்து கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தான் சிவாஜி. தன் படை வீரரில் சிறப்பான சில நூறு பெயர்களை அழைத்துக்கொண்டு மொகலாய எல்லையை நோக்கி ஒரு நாள் மாலையில் கிளம்பினான் சிவாஜி. எல்லைப்புறப் பிராந்தியத்தின் தலைநகரமான அகமத் நகரத்தின் மேல் தன் படையைச் செலுத்தினான். கண் மூடிக் கண் திறப்பதற்குள் காரியம் நடந்துவிட்டது. அகமத் நகரத்தை ஆக்கிரமித்துக் கொள்ளத்தக்க வலிமை அவனிடம் இல்லை. எனினும் அவுரங்கசீபின் படையணியிலிருந்து சுமார் ஒரு ஆயிரம் குதிரைச் சேணங்களையும், ஆசனங்களையும் பறித்துக்கொண்டு வெகு வேகமாகத் தன் இருப்பிடம் சேர்ந்தான் சிவாஜி.

சிவாஜியின் இந்தத் துணிச்சல் மிகுந்த தாக்குதலும், மறைவும் அவுரங்கசீபைக் கலக்கிவிட்டன. அவர் தனக்குக் கீழிருந்த அதிகாரிகளைக் கடிந்து கொண்டார். அகமத் நகர் பக்கம் சிவாஜி துணிந்து காலடி வைத்ததே தம் படையின் மோசமான தன்மையைக் காட்டுவதாக அவர் உறுமினார். சிவாஜி அகமத் நகருக்கு எந்த கிராமங்கள் வழியாகப் பாய்ந்து வந்தானோ அந்த இடத்திலிருந்த அதிகாரிகளெல்லோருமே தூக்கு தண்டனைக்குரியவர்கள் என்று சீறினார்.

இத்தகைய துணிச்சலான காரியத்தைச் செய்த சிவாஜியின் நிலபுலன்களை உடனடியாக ஆக்கிரமிக்க வேண்டுமென்று கடைசியாக உத்திரவும் கொடுத்துவிட்டார் அவுரங்கசீப்.

இதற்கிடையில் பருவக் காற்றின் ஊதல் வந்து சேர்ந்தது சிவாஜிக்கு சாதகமாக வாய்த்தது. அவுரங்கசீபின் ஆட்கள் சிவாஜியின் நிலபுலன்களை அவ்வளவு சீக்கிரமாக ஆக்கிரமிக்க முடியவில்லை. நடுவே, சிவாஜி அவுரங்கசீபுக்கு ஒரு விநோதமான கடிதம் வேறு எழுதிவிட்டான். அந்தக் கடிதத்தில் தான் செய்த காரியத்துக்கு மன்னிப்புக் கோரியும், அதற்குத் தக்க நஷ்ட ஈடு கொடுப்பதாக வாக்குறுதி கொடுத்தும் எழுதியிருந்தான்.

அவுரங்கசீப் இந்தக் கடிதங்களைத் துச்சமாக மதித்திருப்பார். பீஜபுரியிலிருந்து வந்த லிகிதங்களைப்போலவே நடத்தியிருப்பார். ஆனால் இதற்குள் வேறு ஒரு சம்பவம் அவரது கவனத்தை அதிகமாகக் கவர்ந்தது.

ஆக்ராவில் தந்தை ஷாஜஹான் படு படுக்கையாகப் படுத்துவிட்டார். டோரா அவருக்குப் பிரதிநிதியாக உடனே பதவி ஏற்றுக் காரியங்களை நடத்தி வந்தான். அவுரங்கசீபுக்கு இந்த நிலையில் ஏதோ அபாயமிருப்பது தெரிந்தது. தன்னிடம் ஒரு மகத்தான சேனை இருப்பதும் அவர் நினைவுக்கு வந்தது.

உடனே டோராவின் பதவி ஆக்கிரமிப்பைக் கண்டித்து, அதைத் தாம் ஒப்புக்கொள்ள முடியாதென்று ஒரு அறிக்கை விடுத்தார். பீஜபுரிக்கு எதிர்பாராத விதமான சமாதானப் பிச்சையளித்துவிட்டு வடக்கு நோக்கிப் பிரயாணமானார். போகும்போது எல்லைப்புறத்து அதிகாரிகளுக்கு ஒரு எச்சரிக்கை விடுக்கவும் அவர் மறந்துவிடவில்லை. "இந்த சிவாஜியை ஜாக்கிரதையாக கவனித்துக் கொள்ளுங்கள்" என்பதே இந்த எச்சரிக்கை.

அடுத்த ஆண்டு முழுவதும் வாரிசுப் போராட்டம் நாடு முழுவதும் மோதி எதிரொலித்தது. டோராவின் மேல அவுரங்கசீபுக்கு இருந்த கோபத்திற்கு முக்கியமான காரணம் அவனுக்கு கிறிஸ்தவ மதத்திலும் அம் மதத்தினரிடையேயும் இருந்த வாத்ஸல்யம்தான் என்று பல சரித்திரக் காரர் கருதுகின்றனர்.

எது எப்படியிருந்த போதிலும் அவுரங்கசீபுக்கு டோராவைப் பிடிக்கவில்லை! அவன் தான் தந்தை ஷாஜஹானுக்கு விஷ மருந்துகள் கலந்து கொடுத்து அவரைப் படுக்கச் செய்துவிட்டான் என்ற வதந்தியை அது பொய் என்பதை நன்குகத் தெரிந்துகொண்டே, உலவவிட்டார் அவுரங்கசீப்.

மேலும் குஜராத் மாகாணத்தில் அப்போது கவர்னராக இருந்த மூராத் என்பவனை "நியாயமான" ராஜ்யப் பிரதிநிதியாக்கி ஒரு அறிக்கை விடுத்தார். மூராத்துக்கு, வங்காள கவர்னராயிருந்த மற்றொரு சகோதரன் ஷுஜாவின் ஆதரவும் இருந்தது.

நிலைமை இவ்வாறு குழம்பியிருக்கும் காலத்தில் ஷாஜஹான் திடீரென்று, யாரும் எதிர்பாராத முறையில், திரும்ப எழுந்துவிட்டதுடன் விரைவில் தமது உடல் நலத்தில் விசேஷமான மாறுதலும் ஏற்படப் பெற்றார். அவர் திரும்பவும் ராஜீய விஷயங்களைக் கவனிக்க ஆரம்பித்த உடனே முதலாவதாக ஒரு உத்திரவிட்டார். தன் பிள்ளைகளெல்லோரையும் தத்தம் வேலைகளை ஒழுங்காக கவனிக்கச் சொல்வதே இந்த உத்திரவு.

ஆனால், பாவம், பிள்ளைகள்யாரும் இதற்குத் துளி மரியாதை கூடச் செலுத்தவில்லை. எல்லோரும் ஆக்ராவை நோக்கி வேகமாகப் பிரயாணமானார்கள். இதற்கிடையில் அவுரங்கசீப் மூராத், ஷுஜா இருவருக்கிடையிலும் வெற்றிகரமாகப் பிளவை உண்டாக்கினார்.

அந்தக் காலத்து வாரிசுப் போராட்டத்தில் ஷாஜஹானுடைய பிள்ளைகளைப் போலவே அவரது பெண்களும் கலந்து கொண்டது விசேஷமானது. ஜஹனரா, ரோஷனரா என்ற இந்த இரண்டு பெண்களில் முன்னவள் தந்தைக்குச் செல்லம், அழகில் சிறந்தவள். ரொம்பப் படித்தவள். கவிதைக் கடவுள் அவளிடம் பிரத்யேக அன்பு பூண்டிருந்தார் என்றே சொல்லவேண்டும். தன் சகோதரன் டோராவிடம் அவளுக்கு விசேஷமான பாசம் உண்டு.

ரோஷனராவுக்குத் தன் சகோதரியின் அழகு இல்லை. ஆனாலும் பகட்டிலும், அந்தஸ்திலும் அவள் வெகு சிறப்பாக அமைந்திருந்தாள். துடுக்கான வாக்கும் எல்லோரையும் சிரிக்க வைக்கும் பண்பும் அவளிடம் நிறைய இருந்தன. ராஜ சபையிலும், வெளியிலும் தனக்குப் போதுமான செல்வாக்கு இல்லையென்று அவளுக்குத் தெரியும். எனவே அவள் அவுரங்கசீபை ஆதரிக்க ஆரம்பித்தாள். உண்மையில் அவள் தன் தந்தையிடமே அவுரங்கசீபைப் பற்றி "நல்லதாக நாலு வார்த்தை" சொல்லியதுண்டு.

தன் மூன்று பிள்ளைகளுக்கும் ஷாஜஹான் விடுத்த எச்சரிக்கைக்கு பலனில்லாது போனது கண்டு அவர் மூன்று பேரையும் தன் நாட்டுக்குள் காலெடுத்து வைக்கக் கூடாது என உத்திரவிட்டார். டோராவுக்கு தமது அரசவையில் முக்கிய ஸ்தானம் கொடுத்தார்.

அவுரங்கசீப், மூராத், ஷுஜா ஆகிய மூவரும் ஆக்ராவுக்குள் கடைசியில் நுழைந்தேவிட்டார்கள். ஷாஜஹானைப் பட்டத்தினின்று நீக்கிச் சிறைப்படுத்தினார்கள். ஜஹனரா அவருடன் ஒதுக்கப்பட்டாள். ரோஷனரா அவுரங்கசீபுடன் ஒய்யாரமாக அரண்மனையில் உலவ ஆரம்பித்தாள்.

டோரா சிறைப்படுத்தப் பட்டதோடு சில மாதங்களில் கொல்லவும்பட்டார். மூராத்தை இச்சகமாக ஒரு விருந்துக் கழைத்து அவரைச் சிறைப்

(12-ம் பக்கம் பார்க்க)

**பத்திராசிரியர் பயிற்சி**

ஆசிரியர் வேலை வசதிகளை உயர்த்துவதாலேயே வளர்ச்சி வந்துவிடாது. பத்திரிகைத் தொழிலில் புகுவோரின் புத்தி நுட்பத்தையும், படிப்பையும் வளர்ப்பதில் ஊக்கம் வேண்டும். படிப்பு, பண்பாடுள்ள அறிவு இவை, தொழிற்பயிற்சி, தொழில் சாமர்த்தியம், இவைகளினின்றும் தனிப்பட்டவை.

—ஸி. ஆர். ஸ்ரீனிவாஸன்.


# சிவாஜி

ஆசிரியர் :—திருலோக சீதாராம்

| கோட்டை | திருச்சி, 24—4—49 | முற்றுகை |
|---|---|---|
| 14 | விரோதி-ஞு சித்திரை-மீ, 12-உ | 21 |


**வளர்ந்து பிறப்பது**

பிறந்து வளர்வது உலக இயற்கை. ஆனால் இப்பொழுது காலம் போகிற போக்கைப் பார்த்தால் வளர்ந்து பிறப்பது தான் இயற்கையோ என ஐயுறும்படி தோன்றுகிறது. கல்வி பெருகுமுன்னே கதிநிலை தோன்றிவிடுகிறது. அறிவு திரளுமுன்னே அகம் திரண்டு விடுகிறது. இன்னும் பார்வை விரியுமுன்னே பாவனை முறுகி விடுகிறது.

—ஆ. முத்துசிவன்.

# டாக்டர் ஆர். கே. ஷண்முகம் செட்டியார் அவர்களுக்கு

## “சிவாஜி” காரியாலயத்தினர் வரவேற்பு

திருவாரூர்த் தமிழ்த் திருநாள் விழாக்களில் கலந்து கொண்டு 18—4—49-ல் திருச்சிக்கு விஜயம் செய்த டாக்டர் ஆர். கே. ஷண்முகம் செட்டியார் அவர்களுக்கு “சிவாஜி” காரியாலயத்தின் சார்பாக டிலைட் கபேயில் மகத்தான வரவேற்பு ஒன்று அளிக்கப்பட்டது. சுமார் 70 பேர் எழுத்தாளர்களும் கலா ரஸிகர்களும் கூடியிருந்து விழாவைச் சிறப்பித்தார்கள். கோவையிலிருந்து வசந்தம் ஆசிரியர் திருஞான சம்பந்தம் அவர்களும் தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர் நாரண துரைக்கண்ணன் அவர்களும் விழாவுக்கு விஜயம் செய்திருந்தனர்.

நமது ஆசிரியர் திருலோக சீதாராம் அவர்கள் டாக்டர் ஆர். கே. ஷண்முகம் செட்டியார் அவர்களை வரவேற்றுப் பேசுகையில், பொருளாதாரப் புலமை மிகுந்த நமது மாஜி நிதி மந்திரி திருவாளர் செட்டியார் அவர்கள், தமிழ் இலக்கியத் துறையிலும் புதிய வழி வகுத்து தமிழ் எழுத்தாளர்களுக்கெல்லாம் ஒரு ஆதர்சமாகத் திகழ்வதை எடுத்துக்காட்டி திருச்சி எழுத்தாளர்களும் கலைஞர்களும் திரு செட்டியார் அவர்களைப் பார்க்கவும் அவருடைய அறிவு சான்ற சொற்பெருக்கைக் கேட்கவும் பல ஆண்டுகளாக விரும்பியிருந்த வாய்ப்பு இப்போது தான் பலித்ததென்றும் கூறி மாலை சூட்டினார்.

டாக்டர் ஆர். கே. ஷண்முகம் செட்டியார் அவர்கள் வரவேற்புக்குத் தனது மகிழ்ச்சியைத் தெரிவித்துவிட்டு, தமிழ் இலக்கியத் துறையில் பண்டு தொட்டுப் பிரசுரங்கள் வளர்ந்துவந்த முறையை விளக்கிக் கூறிவிட்டு மேலும் பேசியதாவது

“டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களின் இனிமையான பிரசுரங்களைப் பார்ப்பதற்கு முன்பு தமிழ் இலக்கிய உலகத்தை விட்டு நான் சற்று விலகித்தான் இருந்தேன். மிகவும் கடினமாகத் தோன்றிய பழந்தமிழ் இலக்கியங்கள் அய்யர் அவர்களின் பிரசுரத்தைப் பார்த்தபோது மிகவும் எளிதாகத் தோன்றலாயிற்று. சிலப்பதிகாரத்தை நான் ஆவலுடன் பயில ஆரம்பித்தபோதுதான் உலக இலக்கியத்திலேயே ஈடு இணையற்றதான இந்த அரும் செல்வத்தைப் பாமர மக்களும் படித்துப் பயன் பெற வழி செய்ய வேண்டுமென்ற ஆவல் எனக்கு உண்டாயிற்று. நான் ஒரு பண்டிதரை உதவியாக வைத்துக்கொண்டு சிலப்பதிகார ஆராய்ச்சியைப் புரிந்தேன். நான் சென்று ரஸித்த அதே வழியை மற்றவர்களுக்கும் பயன்படும்படி கட்டுரைத் தொடராக உருவாக்கினால் உபயோகமாயிருக்குமென்று கூறி முதன் முதலில் என்னைத் தமிழ் எழுத்தாளனாக ஆக்கியவர் எனது நண்பரும் வசந்தம் ஆசிரியருமான திருஞான சம்பந்தம் அவர்களேயாகும்.

“கொஞ்சகாலத்துக்கு முன் வடநாட்டு நண்பர் ஒருவருடன் நான் பேசிக் கொண்டிருந்தபோது பழங்கால இலக்கியங்கள் பற்றிப் பேச்சு வந்தது. அந்த நண்பர் தன்னுடைய தாய்மொழியில் 500 ஆண்டுகளுக்கு முன்பே இலக்கியங்கள் தோன்றியிருப்பதாகப் பெருமையுடன் கூறிவிட்டு உங்கள் தமிழில் பழைய இலக்கியங்கள் இவ்வளவு தொன்மையானது உண்டா என்று கேட்டார். எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது. கி மு. 500 ஆண்டுக்கு முன்பே தமிழில் பேரிலக்கியங்கள் உண்டு என்று நான் பதில் சொன்னபோது அவர் நம்பவேயில்லை. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமேயே திருக்குறள் தோன்றியது தமிழில் தான் என்பதை அவர் அறியவில்லை என்பது பற்றி எனக்கு வியப்பில்லை. ஏனெனில் நம்முடைய மக்களிலேயே பலர் இது தெரியாத நிலையில்தான் இருக்கிறார்கள். இந்திய சரித்திரம் எழுதுகிறவர்களெல்லாம் வடக்கே ஆரியர் வந்து குடியேறிய காலத்திலிருந்து ஆரம்பித்துத் தான் தெற்கே வருகிறார்கள். ஆரியர் வருகைக்கு முன்பு ஒரு நாகரீகம் இங்கிருந்ததென்றும் அது திராவிட நாகரீகம் என்றும் அவர்கள் அறியவில்லை. திராவிட நாகரீகம் என்ற சொல்லைக் கேட்டால் இப்போது நம்மில் கூடச் சிலர் முகம் சுளிக்கிறார்கள். ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னர் ஆரியர் வருகைக்கு முன்னால் இந்தப் பரந்த நாட்டில் பரவியிருந்த நாகரீகத்தைத் திராவிட நாகரீகம் என்று பெயர் சொல்ல விரும்புபவர்கள் அதை ஆரியருக்கு முற்பட்ட நாகரீகம் என்று வேண்டுமானால் கூறிக்கொள்ளலாம், பெரும்பாலான ஹிந்துக்களை முஸ்லீம் அல்லாதார் என்று சர்க்கார் குறிப்பிட்டு வந்ததுபோல. ஆனாலும் ஆரியருக்கு முற்பட்ட ஒரு நாகரீகம் இங்கிருந்ததென்பதையும் அது தமிழ் மொழியில் விளைந்ததென்பதையும் மறுக்க முடியாது எனவே இந்திய சரித்திரத்தை எழுத வேண்டுமானால் அதை இமயத்திலிருந்து தொடங்கிப் பயனில்லை. குமரி முனையிலிருந்துதான் தொடங்க வேண்டும். உலகத்திலேயே மனிதன் முதலில் நாகரீகமாக வாழ்ந்தது தமிழ் மொழியில் தான் என்பதை நம்முடைய பழைய இலக்கியங்கள் சான்று கூறுகின்றன. சிலப்பதிகாரம், திருக்குறள் போன்ற செல்வங்கள் நம்முடைய பொது உடைமை. எழுத்தாளர்கள் பரந்த தமிழ் இலக்கியங்களைப் பயிலாமல் புதுமைகளை உண்டாக்கிவிட முடியாது. இதுதான் நான் உங்களுக்கு விடுக்கும் வேண்டுகோள்” என்று கூறி முடித்தார். எழுத்தாளர் சங்கத் தலைவர், பிரசண்ட விகடன் ஆசிரியர் திரு. நாரண—துரைக்கண்ணன் அவர்கள் அனைவருக்கும் வந்தனோபசாரம் கூற வைபவம் இனிது முடிந்தது.

**தமிழ் வளர்ச்சிக் கழகம்**

தமிழ் வளர்ச்சிக்கான சேவை புரியும் நோக்கத்துடன் தமிழ் வளர்ச்சிக் கழகம் ஆண்டு தோறும் சிறந்த நூல்களுக்குப் பரிசு அளித்து வருகின்றது. அதற்கென சென்ற ஆண்டு மதுரையிலும், இவ்வாண்டு திருவாரூரிலும் தமிழ்த் திருநாள் கொண்டாடியதை அனைவரும் அறிவார்கள். இப்பொழுது மூன்றுவது பரிசுத் திட்டத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் நடைபெறுகின்றன. ஆதலால் 1947—48-ம் வருஷங்களில் வெளியான எல்லா நூல்களிலும் இரண்டு இரண்டு பிரதிகள் கழகத்திற்கு அனுப்புமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். முன்பே பல வெளியீட்டகங்களும், ஆசிரியர்களும் நூல்கள் அனுப்பியுள்ளார்கள். இதுவரை அனுப்பாதவர்கள் ஜூன் மாதம் 15-ம் தேதிக்குள் காரியதரிசி, தமிழ் வளர்ச்சிக் கழகம் சர்வகலாசாலைக் கட்டிடம், சென்னை-5 என்ற விலாசத்திற்கு அனுப்பவேண்டும்.

அனைவரும் நூல்கள் அனுப்பி எங்களுடன் ஒத்துழைக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

ம. ப. பெரியசாமித்தூரன்,
காரியதரிசி.

# அனுபவ ஞானியின் குறிப்புகள்

திருலோக சீதாராம்

## அமெரிக்க அனுபவங்கள்

அமெரிக்காவில் நாயுடு தங்கியிருந்தபோது அங்கு தன்னுடைய அனுபவங்களைப் பற்றியும் வர்த்தக சம்பந்தமாகவும் அடிக்கடி இந்தியாவில் உள்ள நண்பர்களுக்கு விரிவான கடிதங்கள் எழுதியிருக்கிறார். எனவே சுருக்கெழுத்துக்காரர் ஒருவரை நியமித்துக்கொள்ள வேண்டிய அவசியம் அவருக்கு ஏற்பட்டது. வாரம் ஒன்றுக்கு முப்பது டாலர் வீதம் சம்பளம் கொடுத்து அவர் நியமித்துக் கொண்ட சுருக்கெழுத்துக்காரர் அவ்வப்போது நாயுடு அவர்கள் கூறும் கடித வாசகங்களைக் குறித்துக்கொண்டு டைப் செய்து கொடுத்துவந்தார்.

பல அமெரிக்க ஸ்தாபனங்களில், மின்சாரம், யந்திரங்கள் சம்பந்தமான பல சாமான்களுக்கு ஆங்காங்கு ஆர்டர் கொடுத்து ஏராளமானவற்றைச் சேகரம் செய்வதும் நாயுடு அவர்களின் முக்கியமான வேலைகளில் ஒன்ருக இருந்தது. இதன் காரணமான கடிதப் போக்குவரத்துக்கள் ஒவ்வொருநாளும் மலையாகக் குவிய ஆரம்பித்து விட்டன. சுருக்கெழுத்துக்காரர் செய்த சிறு பிழையொன்றினல் ஒரு சமயம் 180 டாலர்கள் நாயுடுக்கு நஷ்டம் ஏற்பட்டு விட்டதென்ருல் எவ்வளவு பொறுப்பான விலையுயர்ந்த செயல்களில் அவர் ஈடுபட்டிருந்தார் என்பதை அறியலாகும்.

நாயுடு அவர்களே தன் கடிதங்களைக் குறிப்பெழுதி வைத்துக் கொள்ளாமலே நேரே டைப் செய்யும் சக்திபடைத்தவர்தான். ஆனல் அவருடைய அருமையான நேரத்தை இப்படிச் செலவிட்டு விடுவது நியாயமாக இல்லையல்லவா? சுருக்கெழுத்து குமாஸ்தாவாக வந்து வாய்த்தவள் அமெரிக்க இளநங்கையொருத்தி. இந்தியப் பெயர்களை அவள் டைப் செய்யும்போது வேடிக்கையான பல தவறுகள் ஏற்பட்டுவிடுவதுண்டு. ஒரு சமயம் அவள் டைப் அடித்த மேல்விலாசம் ஒன்று **"ரிடையர்ட் கம்யூனிஸ்ட், எக்ஸ்டென்ஷன், கோயம்புத்தூர்"** என்று இருந்தது. எப்படி விலாசம்! நியூயார்க் வர்த்தகர் ஒருவரிடமிருந்து நாயுடு பெயருக்கு வந்த கடிதத்திலும் மேல்விலாசம் வேடிக்கையாக டைப் அடிக்கப்பட்டிருந்தது **"யுனைடெட் மோட்டார்ஸ், கோயம்பத்தூர், ஜி. பி. நாயுடு, ரூம் 855, சிகாகோ."**

நாயுடு மாமிச பக்ஷணி அல்ல, நல்ல சைவ உணவுக்காரர், ஆயினும் முட்டைகள் சாப்பிடுவதில் அவருக்கு ஆக்ஷேபணையொன்றும் கிடையாது. முட்டைக்கும் பாலுக்கும் அதிக பேதமில்லை யென்பதே அவருடைய கருத்து. எனினும் அமெரிக்காவிலிருக்கும்போது அவர் முட்டைகூட சாப்பிடவிரும்பியதில்லை. காரணம் அங்கே சமையல்காரர்கள் மாமிச உணவு சமைத்துப் பரிமாறும் கரண்டிகளிலேயே முட்டையையும் பக்குவம் செய்வதைக் கண்டதனல் அவர் முட்டையைச் சாப்பிட அருவருப்படைந்தார் என்று தெரிகிறது.

சைவ உணவு சாப்பிடுவதில் உள்ள பலாபலன்களைப்பற்றிய உடற்கூறு உண்மைகள் ஒருபுறமிருக்க, கொல்லாமை என்ற உயர்ந்த பண்பின் விளைவுதான் நாயுடு அவர்களைக் கவர்ந்திருப்பதாகத் தெரிகிறது. கொல்லாமையை இவர் அனுஷ்டிப்பதனல் ஏற்பட்ட ஒரு லாபத்தைப் பற்றி அவரே வேடிக்கையாகக் கூறினர். ஜியார்ஜியஸ் பிலிப்பர் கப்பலில் தீப்பிடித்தபோது கடலில் குதித்தாரல்லவா? இவருடன் கூடக் குதித்தவர் சிலர் கடல் மீன்களுக்குச் சிலர் இரையாகியும் சிலர் துன்பத்துக்காளாகியும் அவதிப்பட்ட காலத்தில் நாயுடுவின் பக்கத்தில் கடல் பிராணிகள் ஒன்றும் அருகே வந்து தொந்திரவு செய்யவேயில்லையாம். மற்ற ஜீவராசிகளை இவர் கொன்று தின்பதில்லையாகையால் அவையும் இவரைத் தொடவில்லை போலும் என்று கருதுவதில் அசம்பாவிதம் ஒன்றுமில்லை. தேள் விஷம் இறக்கவும், பாம்புகளையும், மனிதர்களையும்கூட வசப்படுத்திவிடவும் அவருக்கு இருக்கும் பார்வையொளியும் கவர்ச்சியும் புலால் உண்ணாமையால் ஏற்பட்ட ஜீவ ஐக்யவெற்றியாக ஏன் கொள்ளக்கூடாது?

அமெரிக்காவில் உணவு விலை யானை விலை குதிரை விலையாகக் கூட இருந்திருக்குமென்று தோன்றுகிறது. ஒரு கோப்பைத் தக்காளி ரசத்துக்குக் கொடுக்கும் விலை, இந்தியாவில் இரண்டுவேளை ராஜபோஜனம் சாப்பிடலாமென்று நாயுடு கூறுகிருர்.

செய்ண்ட் லூயியிலும் மற்ற இடங்களிலும் நாயுடு தங்கியிருந்த காலத்தில் அமெரிக்கப் பத்திரிகை நிருபர்கள் அவரை வட்டமிட்டுக்கொண்டேயிருந்திருக்கிருர்கள். அவருடைய புகைப்படமும் அவரைப்பற்றிய செய்திப் படங்களும் பத்திரிகைப் பக்கங்களை நிரப்பிக் கொண்டிருந்தன. அவர் தொழிற்சாலைகளுக்குச் சென்று யந்திரங்களைப் பார்வையிட்டபோதெல்லாம்கூட அவற்றைப்புகைப்படமெடுத்துப் பத்திரிகைகள் பிரசுரித்திருக்கின்றன. இந்தத் தொடரில் அந்தச் செய்திப் படங்கள் பலவற்றை நாம் பிரசுரித்திருக்கிருேமல்லவா?

16 மில்லி மீட்டர் காமிரா என்பது புகைப்படக்கருவிகளில் நேர்த்தியானதும் நுண்மையானதுமாகும். இந்தக் கருவியைக் கண்டுபிடித்த அலெக்ஸாண்டர் விக்டர் என்பவருடன் நாயுடு சர்ச்சைபுரிந்தபோது இந்திய விஞ்ஞானப் புதுமை உற்பத்தியாளருடன் அமெரிக்க விஞ்ஞானப் புதுமை உற்பத்தியாளர் என்ற தலைப்பிட்டுப் புகைப்படம் பத்திரிகைகளில் பிரசுரமாயிற்று.

"டிட்ராயட் நியூஸ்" என்ற பிரபல பத்திரிகை யொன்றின் நிருபர், நாயுடு 1932-ல் அமெரிக்கா விஜயம் செய்திருந்தபோது அவரைப் பேட்டி கண்டு அவருடைய புகைப்படத்தையும் தனது பத்திரிகையில் பிரசுரித்திருந்தார். 1940-லும் அதே நிருபர் நாயுடு அவர்களைப் பேட்டிகண்டு விரிவாக எழுதியதுடன் 8 வருடங்களுக்கு முன்பு தான் எடுத்த நாயுடுவின் உருவப் புகைப்படத்தையும் மீண்டும் பிரசுரித்தார்.

அமெரிக்கப் பத்திரிகை நிருபர்கள் சூழ்ந்து நின்று அவரைச் செய்திப் பொருளாக்கிய அந்தக் கோலாகலங்களில் நாயுடு சிக்கித் திணறியிருக்கிருர். ஒரு நிருபரிடம் நாயுடு சிரித்துக்கொண்டே பின்வருமாறு கூறினர் "உங்கள் பேட்டிகளாலும், உங்கள் பத்திரிகைவிளம்பரங்களாலும் என்னை ஏமாற்றிவிட முடியாது" என்று. "சாதாரணமாக மனிதர்கள் விளம்பரப் புகழ்ச்சிகளில் பெருமையடையத்தான் செய்கிருர்கள். ஆயினும் இங்கே அமெரிக்காவில் ஒருவனுடைய பெயர் பத்திரிகைகளில் அடிபடுவது மிகவும் சங்கடத்தில் கொண்டுபோய் விடுகிறது. பத்திரிகைகளில் ஒருவர் பெயர் அதுவும் என்னைப்போல் இந்தியன் அல்லது வெளிநாட்டான் ஒருவன் பெயர் அடிபட்டால் அமெரிக்க ஆடவரும் பெண்டிரும் உடனே விருந்துபசாரங்கள் நடத்தி உபந்யாசம் கேட்கத் தயாராகி விடுகிருர்கள். இதற்கே ஒரு ஓய்வே இராதுபோல் தோன்றுகிறது" என்று நாயுடு இந்தியாவுக்கு எழுதிய ஒரு கடிதத்தில் குறிப்பிடுகிருர்.

எதிர்பாராத பல அசௌகரியங்களுக்கும் அவர் ஆளாகக நேர்ந்திருக்கிறது. வயிற்றுவலி அவரை அங்கேயும் தொடர்ந்து சங்கடம் விளைவித்திருக்கிறது. அதுமட்டுமல்ல. கையில்போதிய

(12-ம் பக்கம் பார்க்க)

# கள்ளிப்பட்டியும் வெள்ளி நிலாவும்

## 2. வழிக்காட்சிகள்

"நிழல் அருமை வெய்யிலிலே" என்றார் ஓர் பெரியார். ஆம், குளிர்ந்த நிழலில் குழந்தை மஞ்சுவோடு குதூகலமாகப் பேசி சிரித்து விளையாடிக் கொண்டிருந்த நான், கடும் வெப்பத்திலே காரிலே கனவேகமாகச் சென்றபோது 'அந்த நிழலி'ன் அருமையை தகிக்கும் வெப்பத்தில் மிக நன்றாகக் காண முடிந்தது. கண்டு அனுபவிக்கவும் முடிந்தது. அதற்குக் காரணமாக இருந்தவர் நண்பர் காரைக்குடியார். அன்பர் காரைக்குடியாரை உங்களுக்கு அவசியம் அறிமுகப்படுத்த வேண்டி இருக்கிறது, இந்தக் கட்டத்தில். அதிகமாகப் பேசமாட்டார். ஆனால் ஆளைப் பார்த்ததும் எடை போடத் தெரிந்தவர், சிரித்த முகம். நன்றாகச் சிரிக்க வைக்கும் தன்மை நிறைந்தவர்.



தங்கவேலு வந்தார்

பெரிய சரீரம். இருப்பினும் குழந்தையைப் போன்ற இயல்பு! காரைக்குடியார் சொன்னார் "பாருங்கள் வெளியே விரிந்து கிடக்கும் இயற்கையைப் பாருங்கள்! இந்தச் சத்திய மங்கலம் ரோட்டின் இயற்கை அழகுகளை மனம் கொண்ட மட்டும் அள்ளிப் பருகுங்கள்" என்றார். சோமு ஒவ்வொரு ஆரஞ்சுப் பழச் சுளைகளை உரித்துத் தரும்போதெல்லாம், ரோட்டுப் புழுதி, வறண்ட காற்றின் மணம், சருகுகளின் சம்மேளிப்பு, இவைகளைப் பொருட்படுத்தாமல் அள்ளிப் பருகிக்கொண்டுதான் வந்தேன்!

சிலப்பதிகாரத்தில் நெஞ்சையள்ளும் காட்சிகள் வருகின்றன. பிரயாணத்திலே எல்லாருக்கும் நல்ல காட்சிகள் தென்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றன. சீதாபிராட்டியாருக்கு காட்டழகு நதியழகு காட்டிக்கொண்டே ராமசாமி வழி அழைத்துச் சென்றார் என்பதையெல்லாம் படித்திருக்கிறேன். குற்றாலத்தில் சில நாட்கள் டி. கே. சி. அவர்களுடன் தங்கியிருந்து கம்பன் கவியமுதை உண்டதுடன் பொதிகையின் பேரழகையும் சுவைத்திருக்கிறேன். அன்பர் காளியப்பாவின் 'ஊட்டி' வருணனை, கொடைக்கானல் தேன் சுகத்தெவிட்டா மோகனமெல்லாம் முருகன் போன்ற நண்பர்கள் பகரக் கேட்டுப் பரவசப்பட்டதுண்டு. வருஷக் கணக்கில் நீலத் திரைக்கடல் ஓரத்தில் நின்று சொக்கழகில் மூழ்கி மூழ்கித் திளைத்ததும் உண்டு. இவைகளையெல்லாம் காரைக்குடியாரின் "வறண்ட காட்டு வர்ணனை" தூக்கியடித்துவிட்ட தென்றால் அந்தப் புழுதிப் போதிசயத்தை ஒரு பெருங் காவியமாகத்தான் பாடவேண்டும்.

இடையே கள்ளிப் பட்டியைப் பற்றிய எண்ணங்கள் லேசாக மனத்திரையில் வட்டமிட்டுச் சுழலும். அங்கே என்ன அதிசயம் நடக்கிறது? புதுமையாக என்ன சங்கதி அங்கே உருவாகி வருகிறது? பிறருக்கு வழிகாட்டும் படியாக என்ன காரியங்கள் அங்கு அரும்பிக் கொண்டிருக்கின்றன என்ற யோசனைகள் தோன்றும். ஆனால் சோமு சொல்ல மறுத்தார். நேரில் பார்த்தே தெரிந்து கொள்ளுங்கள் என்று சொல்லி விட்டார்.

சத்திய மங்கலம் வழியாக கோபிக்குச் செல்வது என்ற பிரயாணத் திட்டம். பின்னர் கோபியிலிருந்து கள்ளிப்பட்டிக்குப் புறப்படுவதாக முடிவு செய்திருந்தோம். சத்திய மங்கலத்திற்கு அன்று அண்ணு தங்கவேலு வருவதாக இருந்தார். தங்கவேலுவின் வருகையை ஆவலுடன் எதிர் பார்த்த எங்கள் கண்கள் காரின் கனவேகத்தைக் கணக்கெடுக்க மறந்தது.

மற்றவர்களுக்கு எப்படியோ எனக்குத் தெரியாது. எனக்கு மட்டும் கார் மணிக்கு இருபது மைலுக்கு மேல் போனால் கொஞ்சம் பயம்தான். எழுத்தில் வீரரசத்தைப் பிழிந்து எடுத்து அடிக்கடி வாசக நேயர் முன் வைப்பதுண்டு. வானம் இடிந்து விழுந்தாலும், மலை புரண்டு வந்தாலும் கலங்கா நெஞ்சுடன் வாழவேண்டும் என்றெல்லாம் உபதேசப் படலத்திற்கு கொஞ்சமும் குறைச்சலில்லை. ஆனால், கார் கொஞ்சம் வேகமாகச் சென்றாலும் நம்மால் சகித்துக் கொள்ள முடியாது. ஆனால் காரைக்குடியாரின் சிரிப்புக் கடலில், வேகக் கடலைக் கொஞ்சம் மறந்திருந்தேன் மாலை ஆக ஆக கடும் கதிர்களின் வெப்பம் குறையக் குறைய, சத்திய மங்கலத்தை முத்தமிடும் மலைத் தொடர்களின் இனிய காட்சிகளும் கண்முன் விரியத் தொடங்கின. எதிரே பிரம்மாண்டமாக நர்த்தனமிட்டுக்கொண்டு படுத்திருக்கும் தெள்ளிய மலைக் கோலம் சிந்தையில் விவரிக்க முடியாக் கிளர்ச்சியை உண்டாக்கிற்று. "ஆச்சு, சத்திய மங்கலம் ஆச்சு" என்றார் காரைக்குடியார்.

"ஒடத்துறை மாப்பிள்ளையும் மன்னிக்கவும், தங்கள் ஜமீன்தாரும்-இன்று கோபிக்கு வந்திருப்பார்" என்றார் சோமு.

"நன்று" என நிமிர்ந்து உட்கார்ந்தேன்.

(தொடரும்)

# சித்திரைக் கன்னி

(டி. வி. சுவாமிநாதன்)

—⊕—

சித்திரைக் கன்னி சிரித்தனள்—ஒளி
சிந்துமவள் பல் வரிசை வெண்
முத்தினைக் கோத்ததோர் நற்சாம்—புன்
முறுவலுக் கீடிணை எதிலே

ரத்தினக் கற்கள் பதித்ததாய்—வெகு
ரம்மியமாம் முடி சூடியே
நித்திலம் கொண்டொரு நாள்மயன்
நிர்மித்த கோயிலின் நாயகி

கோடையும் மாரியும் தன்வழி—செங்
கோலினை ஓச்சும் வசந்தமும்
ஓடையும் ஆறும் கடல்களும்—புது
ஓட்டமுறும் தலை நாளிதாய்

வந்தது இன்னொரு ஆண்டெனு—நம்
வாழ்க்கையின் போக்கில் விரோதியும்
இந்திய நாட்டினில் வையத்தில்—பல
இன்பணி ஆற்றிடும் தொண்டினல்

முந்தி யாரோ தனக் கிட்டபேர்—இனி
முற்றும் பொய்யாக்கிட வேண்டியே
வந்துள நண்பன் விரோதியை—இன்று
வாழ்த்தி வரவேற்புச் சொல்கிறோம்

பஞ்சம் பிணி கண்டு அஞ்சிடும்—தோட்
பலத்தை படைத்த விரோதியாய்
வஞ்சனை சூது கண்டோடிடும்—அற
வாளினைக் கையில் கொண்ட விரோதியாய்

கெஞ்சிடும் கீழ்மைக் குணத்தினை—இருட்
கேணியில் தள்ளும் விரோதியாய்
வெஞ்சினம் துஞ்சிட அன்பினை—முடி
வேந்தனுய் ஆக்கும் விரோதியர்

பங்குனி என்ற உன் ஆயுளின்—கடைப்
பக்கம் வரை நீ திகழ்ந்திடு
பொங்கிடும் நன்றி அகத்தினுள்—ஓர்
பொற்கோவில் உனக்கு யாம் கட்டுவோம்

பத்தரை மாற்றுடை பொன் நிறம்—காலைப்
பரிதிபோல் பூக்கின்ற இன்முகம்
உத்தமப் பொன்னொளிக் கதிர்களில்—இன்று
உஷையுடன் சோதரி யாய்வந்தாள்.

சிவாஜி

அறவலி காத்து நாளும் அன்னையின் பணிக்கென்றே நம்
உறையிலே உறங்கும் வீரம் உருவினேம் ஓங்கிவிட்டோம்.

திருச்சி. 24—4—49

# ஆந்திரப் பிரிவினை

ராஷ்டிரபதி டாக்டர் பட்டாபி சீதாராமையா காங்கிரஸ் தலைமைக்கு வரும் ஆரம்பகாலத்திலேயே ஒருவித உணர்ச்சி நாடெங்கிலும் பரவியிருந்தது. டாக்டர் பட்டாபி பதவிக்கு வந்தவுடன் எந்தக் காரியம் செய்தாலும், செய்யாவிட்டாலும் தனி ஆந்திர மாகாணம் காண்பதற்குரிய உருப்படியான காரியம் ஏதாவது செய்தே தீருவார் என்பதே இந்த உணர்ச்சி. இந்த உணர்ச்சி சரியானதுதான் என்ற பேருண்மை சமீபத்தில் தெளிவாகத் தெரிந்து போய்விட்டது.

சென்னை சட்டசபைக் காங்கிரஸ் கட்சியின் தனிக் கூட்டத்தில் இந்தப் பிரச்னை ரொம்ப வேகமாக விவாதிக்கப்பட்டிருப்பதுடன், உடனடியாக ஆக வேண்டிய காரியங்கள் குறித்து திரு. பட்டாபியின் தெளிவான பத்திரிகை பேட்டியும் வெளிவந்திருக்கிறது.

தனி ஆந்திர மாகாணம் ஏற்படுவதற்குத் தமிழ் நாடு குறுக்கே நிற்பதாக ஒரு காலத்தில் ஒரு உணர்ச்சி ஆந்திரர்களிடையே அமோகமாக இருந்து வந்தது நேயர்களுக்குத் தெரியும். தனி ஆந்திர மாகாண ஏற்பாட்டினல் தமிழருககு ஏதோ கெடுதி வருமென்றும், அதன் காரணமாக இதை அவர்கள் எதிர்ப்பார்கள் என்றும் ஆந்திரர்கள் கருதிவந்தார்கள்.

உண்மையில், ஆந்திர மாகாணம் தனியாக ஏற்படுவது குறித்துத் தமிழருக்கு எவ்விதமான விரோத உணர்ச்சியும் கிடையாது. தமிழர்கள் தங்களுக்குத் தனி மாகாணம் வேண்டும் என்று கூட இதுகாறும் வலுவாக வற்புறுத்தவேயில்லை. நாட்டின் நிலையோ, மற்ற ஏது காரணமோ இருந்திருக்கலாம் இதற்கு.

ஆந்திர மாகாணம் ஏற்படுவதில் தமிழருக்கு யாதொரு விதமான 'தடையும்' கிடையாது என்ற உண்மையை இதுகாறும் எப்படியோ ஒத்துக்கொள்ளாதிருந்த ஆந்திர மகாஜனங்கள் சார்பில் இன்று டாக்டர் பட்டாபியே இதைத் தெளிவாக ஒப்புக்கொண்டிருப்பது நமக்கு இன்பமளிக்கிறது.

தமிழ்-ஆந்திர சர்ச்சைகள் ரொம்பவும் காரசாரமாக இடையே நடந்ததுண்டு. தார் கமிஷன் இங்கு வந்த காலையிலும், அதற்கு முன்னும், பின்னும் மகத்தான "போராட்டங்களே" நடந்திருக்கின்றன என்று சொல்லலாம். டாக்டர் பட்டாபியின் பத்திரிகை பேட்டியின் பின்னர் இவை தீர்ந்து போய்விட்டனவா என்பது சந்தேககாஸ்பதமான விஷயமாயிருந்த போதிலும், தீர்ந்து போக இருந்த தடை நீங்கிவிட்டது என்று சொல்ல ஓரளவு இடமிருக்கிறது.

தமிழ்-ஆந்திர சர்ச்சைகள் இடையே நடந்ததன் காரணம் ஆந்திரர்களேயன்றி தமிழர்களல்ல. சென்னை ஆந்திர மாகாணத்தைச் சேர்ந்தது என்று முதலில் சிலபேர் ஒரே கதறுகக் கதறினார்கள். பின்னர் இந்த ஸ்வரம் கொஞ்சம் குறைந்து, சென்னையை ஆந்திரரும், தமிழரும் ஒரு மாதிரியாகப் பங்கு போட்டுக்கொள்வது என்ற கூச்சல் அப்புறம் கிளம்பிற்று, கடைசியாக இன்று டாக்டர் பட்டாபி மிகத் தெளிவான முறையில் "சென்னை வேண்டுமென்று போராடுவது வீண் விதண்டாவாதம். சென்னை வேண்டுமென்றால் ஆந்திரப் பிரிவினையை எல்லையின்றி ஒத்திப்போட வேண்டும். ஆந்திரப் பிரிவினை வேண்டுமென்றால் சென்னை நகரத்தின் மீது உங்களுக்கிருக்கும் உரிமையை விட்டுவிடுங்கள்" என்று கூறிவிட்டார். இந்த "விட்டுவிடுங்கள்" என்ற பதத்துக்கு "எப்போதுமே விட்டுவிடுங்கள்" என்பதுதான் பொருள் என்றும் விளக்கியிருக்கிறார் டாக்டர் பட்டாபி.

டாக்டர் பட்டாபியின் இந்த உத்வேகம் வரவேற்கத்தக்கதாயிருந்தாலும், ஆந்திரர்களிடையே இதற்கு எவ்விதமான எதிரொலியிருக்கும் என்பது தெரியவில்லை. உண்மையில் இதற்கு பலமான எதிர்ப்பு இருப்பதாகவே டாக்டர் பட்டாபி தமது பேட்டியில் கூறியிருக்கிறார்.

சென்னை நகரத்தையே விட்டுவிடும் அளவுக்கு ஆந்திரர்கள் "வளர்ந்துவிட்டார்கள்" என்ற விஷயம் நமக்குச் சற்று வியப்பையே உண்டாக்குகிறது. இந்த நிலைக்குத் தக்க காரணம் இல்லையென்று நாம் கூறவில்லை. இவ்வளவு சீக்கிரத்தில் ஆந்திரர்கள் திருந்திவிட்டார்களே என்றுதான் நாம் ஆச்சரியப்படுகிறோம்.

திருவாங்கூர்—கொச்சி இணைப்பையொட்டி மொழிவாரிப் பிரிவினை விஷயம் அதிக கவனத்துக்கு வந்தது நேயர்களுக்குத் தெரியும். ஆனல் அதுவே இன்னும் தீர்ந்து போய்விடவில்லை. திருவாங்கூர் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவரது சத்யாக்கிரகத்தையொட்டி காமராஜர் தலையிட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதும் நேயர்களுக்குத் தெரியும்.

நாட்டின் இன்றைய நிலையில் மொழிவாரிப் பிரிவினை விஷயத்தை ஒத்திப்போட வேண்டுமென்ற உணர்ச்சி எங்கெங்கும் நிலவிவருகிறது. மொழிவாரிப் பிரிவினையை உடனடியாக ஆரம்பித்தால் எழக்கூடிய "போராட்டங்கள்" பற்றி இருக்கும் கவலையே இதற்குக் காரணமாயிருக்கலாம். ஆனல் எக்காலும் இந்தப் "போராட்டங்கள்" வந்துதானக வேண்டும் என்ற உண்மை மறுபுறம் இருப்பதை யாரும் மறுக்க முடியாது.

கேரள, கர்நாடக மாகாணங்கள் விஷயம் இன்னும் போதிய 'பிராபல்யம்' அடையவில்லை என்றே தோன்றுகிறது. ஆந்திர மாகாணம் மாத்திரம் எல்லோருக்கும் முந்திக்கொண்டு விட்டதுபோல் தோன்றுகிறது!

சென்னையை விட்டுவிடும் விஷயம் ஆந்திர மாகாணப் பிரிவினை விஷயத்தில் இருக்கும் சிக்கலைப் பெரிதளவு தீர்த்துவிடுகிறது என்று கூறலாம். எனினும் மற்றைய மாகாணங்கள் எல்லாம் இந்தப் பிரிவினை விஷயத்தை ஒத்திப் போட்டிருக்கும் தருணத்தில் சென்னையில் மாத்திரம் இத்தகைய பிரிவினையொன்று அவ்வளவு சுலபமாக நடக்குமாறு அரசியல் நிர்ணய சபையோ, கவர்னர்-ஜெனரலோ, மத்திய அரசாங்கமோ விட்டுவிடுமா என்பதே தற்போதிருக்கும் கேள்வி.

ஆந்திர மாகாணப் பிரிவினையைக் கொண்டுவரும் விஷயத்தில் செய்யவேண்டிய சடங்குகள் பின்வருமாறு. சட்டசபைக் கட்சிக் கூட்டத்தில் இதற்கு ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி, இதை சட்டசபைக்குக் கொண்டுவந்து, அங்கிருந்து கவர்னர் ஜெனராலுக்கு இதையனுப்பவேண்டும். கவர்னர் ஜெனரல், இதற்கு சம்மதிக்கவேண்டும். இதற்கு 1935-ம் ஆண்டு அரசியல் சட்டத்தின் 290-வது செக்ஷன் இடம் கொடுப்பதாகத் தெரிகிறது.

சென்னையை விடுத்தபின, இப்போது ஆந்திர ஜில்லாக்களாயிருக்கும் பிராந்தியங்களும், 'கர்நாடக மாகாணத்தின்' ஒரு சில பகுதிகளும் ஆந்திர மாகாணத்தில் சேரவேண்டுமென்பது டாக்டர் பட்டாபியின் கருத்து. சென்னை நகரம் தவிர, எல்லைப் பிராந்தியங்களிலுள்ள சில ஜில்லாக்களிலும் சில உரிமைகள் தமிழ் ஆந்திரப் போராட்டத்தில் சர்ச்சையிலிருக்கின்றன. மேலும் கர்நாடக மாகாணத்தின் பகுதிகளில் ஆந்திரத்துக்கு இருக்கும் உரிமைகள் குறித்து கர்நாடகப் பிரதிநிதிகளுக்கு எந்த உணர்ச்சி நிலவுகிறதென தெரியவேண்டும்.

இவையெல்லாவற்றிற்கும் மேலாக தனி ஆந்திர மாகாணக் கோரிக்கைக்கு விசேஷமான அவசரம் இருப்பதாக கவர்னர் ஜெனரல் ஒப்புக்கொள்ளவேண்டும். இது சந்தேகமாகத்தான் இருக்கிறது. காரணம், ராஜாஜி தனி ஆந்திர மாகாணத்துக்கு விரோதமாகயிருக்கிறார் என்பதல்ல—உண்மையில் அவர் இதற்குசாதகமானவரே. ஆனல் நாட்டின் இன்றைய நிலையில் தனி ஆந்திர மாகாணத்துக்கு என்ன அவசரமிருக்கிறதுஎன்று கவர்னர் ஜெனரல் நினைக்கலாம் என்பதே நம் கருத்து.

இவைதவிர சிக்கலான நிர்வாகப் பிரச்னைகள் வேறு இருக்கின்றன. நல்ல வேளையாக இதற்கு சிதமான முறையில் சென்னை மந்திரிசபையிலேயே சிறிது காலத்துக்கு ஆந்திரர்கள் தனியாகப் பதவி வகிப்பது என்ற யோசனை இருந்துவருவதாகத் தெரிகிறது.

சட்டசபைக் கூட்டம், மத்தியில் நிலவும் கருத்து இவை குறித்து நாம் காத்திருந்து பார்க்கவேண்டுமெனத் தோற்றுகிறது.



ஆந்திரப் பிரிவினைகோரும் பட்டாபி



மகாத்மா காந்தி ஞாபகார்த்த நிதியை விரைவில் பெருக்கும் நோக்கத்துடன் பாபு ராஜேந்திர பிரசாத் தெற்கே வருகிறார்.

**ஆரூர்த் திருவிழா.**

திருவாரூரில் நடைபெற்ற தமிழ்த் திருநாள்பற்றி திருலோகசீதாராம் எழுதும் விரிவான விமர்சனக் கட்டுரை அடுத்தவாரம் வெளிவருகிறது.

# சிவாஜி சிறுவர் மலர்





விலை 1 அணா

"மூர்த்தி" ("வாண்டு மாமா")

சிவாஜி வாரப்பத்திரிகை 24—4—49 அனுபந்தம்—முற்றுகை 21



Regd. No. M. 3398. THE 'SHIVAJI'





6-ம் பக்கத் தொடர்ச்சி.


மந்திர சைக்கிளைத் திருடிய மனிதன் கிட்டு போனதும் தன்மேல் ஏறிக்கொண்டு "பிளிப்பட்டி, பிளிப்பட்டி பிளிப், லிலிப்பட்டி லிலிப்பட்டி லிலிப்" என்றான். சைக்கிள் றக்க ஆரம்பித்தது. வேகவேகமாக. ஓடிற்று நாடு நகரம், டு மலை எல்லாம் சுற்றிச் சுற்றி வந்தான். ரொம்ப களைத்து விட்டான். ஆனால் சைக்கிள் நிற்கவே இல்லை. என்னென் வோ செய்து பார்த்தான். உஹூம் அது நிற்கவே இல்லை. நிற்கவைக்கும் மந்திரம் அவனுக்குத் தெரிந்தால்தானே. ரொம்பக் களைப்படைந்த அந்த மனிதன் கிட்டுவின் வீட்டுக் குச் சைக்கிளை விட்டுக்கொண்டு போனான். கிட்டு வாசலில் நின்று கொண்டிருந்தான். அவனை நெருங்கியதும் "அம்பி! அம்பி! இந்த சைக்கிளை நிறுத்தச் சொல்லேன். நாள் கணக்காக ஓடிக்கொண்டிருக்கிறதே!" என்று சொல்லுவதற் குள் சைக்கிள் அவனையும் அவன் வீட்டையும் தாண்டி வெகு தூரம் ஓடிவிட்டது. வெகுநேரம் கழித்து மறுபடி கிட்டுவின் வீட்டண்டை வந்து அதேபோலப் பரிதாபமாக வேண்டினான் இந்தத் தடவை கிட்டு "நீதானே என் வாத்தையும் திருடிக் கொண்டவன்? வாத்து இருக்குமிடத்தைச் சொல், சைக்கிளை நிறுத்துகிறேன்" என்றான் கிட்டு சைக்கிளுடன் ஓடிக் கொண்டே.

"வாத்து என் கொல்லைப் புறத்தில் ஒரு பெட்டிக்குள் இருக்கிறது" என்று சொல்லிக்கொண்டே சைக்கிளுடன் வெகுவேகமாகச் சென்று மறைந்தான் அந்தத் திருடன்.

கிட்டு அவன் வீட்டிற்குச் சென்று வாத்தையும் அது இவ்வளவு நாட்களாகப் போட்டிருந்த முட்டைகளையும் எடுத் துக்கொண்டு தன் வீட்டுக்கு வந்தபோது சைக்கிள் மறுபடி இவன் வீட்டுப்பக்கம் வெகு வேகமாக அந்த மனிதனுடன் வந்தது. கிட்டு உடனே 'லோப்பிட்டி லோப்பிட்டி லோப், ஸ்டாப்பிட்டி ஸ்டாப்பிட்டி ஸ்டாப்' என்றான். சைக்கிளும் நின்றது அந்த மனிதன் பொத்தென்று தரையில் விழுந்து மூர்ச்சையானான். அவனை தன் வீட்டிற்குத் தூக்கிக் கொண்டுபோய் அவன் களைப்பைப் போக்கி அனுப்பினான் கிட்டு. அந்த மனிதன் இனி பிறர் பொருளை தொடுவதே இல்லை என்று சபதம் செய்துகொண்டான். இப்போது கிட்டு பெரிய பணக்காரன் என்று சொல்ல வேண்டுமா!

குட்டித் தொடர் கதை — 'பூனை'

## மூன்று எலிக் குட்டிகள்

### 20. சேறும் சகதியும்.

வீராப்புடன் சென்ற மீனுவும் ஜானுவும் சிறிது தூரம் வேகமாகச் சென்றனர். சில நிமிஷங்கழித்து மீனு "கீ கூ" என்று கத்தி னாள். திரும்பிப்பார்த்த கிட்டுவும் சீனுவும் அவள் சேற்றில் விழுந்து தவிப்பதைக் கண் டனர். உடலில் பாதி சேற்றில் மூழ்கிவிட் டது. உடனே வேஷ்டியை வரிந்து கட்டிக் கொண்டு சேற்றில் புகுந்து மீனுவைக்கரை சேர்த்தான்.

ஜானுவுக்கு மூக்குப் புடைத்து நின்றது. மீனுவோ உடல் முழுதும் சேற்றைப் பூசிக் கொண்டு நின்றாள். "இந்தக்கோலத்தோடு மாமா வீட்டிற்குப் போவது எனக்குப் பிடிக்கவில்லை" என்றான் சீனு கிட்டுவின் காதில் ரகசியமாக.

கிட்டு மௌனமாக முன்னால் நடந்தான். சிறிது நேரத்தில் நால்வரும் ஒரு ஓடையின் கரையை அடைந்தார்கள்.

"ஜானு இங்கேயே நில்......சீனுவும் நானும் முதலில் இதில் குதித்து நீந்தி அக் கரையில் போய் நின்றுகொண்டு உங்களைக் கூப்பிடுகிறோம். நீங்கள் ஜாக்கிரதையாக இறங்கி நீந்தி அங்கு வாருங்கள். நீரில் மூழ் காமல் முகத்தை மேலே தூக்கிக்கொண்டு நிதானமாக வரவேண்டும்" என்று சொல்லி விட்டு கிட்டு சீனுவுடன் ஓடையில் நீந்திச் சென்றான். மறு கரையை அடைந்ததும் சுற்றும் முற்றும் பார்த்து விட்டு சைகை செய்தார்கள். உடனே மீனுவும் ஜானுவும் ஓடையில் இறங்கி நீந்த ஆரம்பித்தன. கரை சேர்ந்ததும் இரண்டுக்கும் பல் தாளம்போட ஆரம்பித்தது.

"அவ்......வவ்......வவ்......குளிர் நடுக் கிறது" என்றன இரண்டும்.

"பரவாயில்லை...குளிராக இருந்தாலும் உன் உடம்பில் பாவாடையில் இருந்த 'சேறு' போயிற்று. ஜானு மூக்கின் வீக்க மும் குறைந்து விட்டது ... என்று மேலே நடந்தன. மாலை இளம் வெயில் அவர்களின் உடையை உலாவைத்து விட்டது. சிறிது நேரத்தில் மீனுவும் ஜானுவும் சுறுசுறுப் படைந்து விட்டார்கள்.

"இப்போது இரண்டு பேரையும் பார்த் தால் சினிமா நட்சத்திரம்போல இருக் கிறது இல்லியா?" என்றான் கிட்டு.

"நான் பயந்தேன். சேறும் சகதியுமா எப்படிடா 'மாமா'வைப்போய்ப் பார்ப்ப தென்று இப்போதுதான் 'ஷோக்கா' இருக்கு" "மாமா மீனுவையும் ஜானுவை யும் அன்புடன் வரவேற்பார்" என்றான் சீனு.

## 'வாண்டு மாமா' பேசுகிறார்!

தம்பி தங்கைகளுக்கெல்லாம் ஆசீர்வாதம்.

சென்ற இரண்டு வாரங்களாக நமது தமிழன்னையை சிம்மாசன மேற்றி அலங்கரித்து அழகுபடுத்தி மகிழ்ந்தோம்!

புரியவில்லையா உனக்கு! காரைக் குடியில் நடந்த **கம்பர் விழாவையும்**, திருவாரூரில் நடந்த **தமிழ்த் திருநாளையும்**தான் சொல்கிறேன். நமது தமிழ் அன்னைக்கு, வைரமும், முத்தும், பவழமும் வைத்திழைத்த 'ராமாயணம்' என்ற ஆபரணத்தை அணிவித்து மகிழ்ந்தவர் கவியரசர் கம்பர். மேல் வகுப்புகளில் 'கம்ப ரது' கவித்திறனைப்படித்து அறிந்து ஆனந்தப்படுவீர்கள். உலகம் புகழும் மேல்நாட்டுக் கவிகளுக்கும் மேலான சிறப்புடையவர் கம்பர். அவரது திருநாளை வெகு விமரிசை யாகக் காரைக்குடியில் நாம் கொண்டாடினோம்.

அடுத்தது திருவாரூரில் 16, 17 தேதிகளில் நடந்த தமிழ் திருவிழா. தமிழ்க்கலையை வளர்க்க தமிழில் பல துறைகளிலும், சிறந்த நூல்கள் எழுதியவருக்குப் பரிசுகள் வழங்கினார்கள்.

— "வாண்டு மாமா"



அம்பி இந்த யந்திரத்தைப்பற்றி நீ கேள்விப்பட்டே இருக்க மாட்டாய்! இது புத்தகங்களை பைண்டுசெய்து மூன்று பக்கத்தை யும் ஒரே சமயத்தில் வெட்டி ஒழுங்குபடுத்தி அழகான புத்தக மாக வெளியே அனுப்பிவிடும். இன்னும் இது நம் நாட்டுக்கு வரவில்லை. இப்போது நாட்டில் புத்தகத்தை பைண்டு செய்து ஒவ்வொரு பக்கமாகத்தான் வெட்டுகிறார்கள்.


...dress, Supplement to the 'Shivaji' issue Dated 24—4—49 Printed




[இது அகில தேவலோக ரேடியோ-குழந்தைகளுக்கான பிரத்யேக ஒலிபரப்பு! கணபதிராயர் பேசுகிறர்]

## 8. அம்பையின் அவஸ்தை

ஹஸ்தினபுரத்தை அடைந்த பீஷ்மர் தன் தம்பி விசித்திர வீரியனுக்கு அந்த மூன்று பெண்களையும் திருமணம் செய்துவைக்க வேண்டிய ஏற்பாடுகளை செய்தார். பந்தல் போட்டாயிற்று. கொட்டுமேளம் கூட முழங்க ஆரம்பித்தது. சபையில் எல்லோரும் கூடி இருக்கும்போது அந்த மூன்று பெண்களில் மூத்தவளான அம்பை "பீஷ்மரை நோக்கி கங்கையின் புதல்வரே! தங்களுக்குத் தெரியாத தர்மமல்ல, தாங்கள் எல்லாம் அறிந்தவர். நானே வெகு காலத்துக்கு முன்பே சௌபல தேசத்து இளவரசனை சால்வனை கணவனாக என் மனதில் வரித்துவிட்டேன். அப்படி இருக்க இப்போது என்னைப் பலவந்தமாக உங்கள் தம்பியை மணக்கும்படி வற்புறுத்துகிறீர்கள். இது தங்களுக்கே நியாயமென்று பட்டால் செய்யுங்கள்" என்றள்.

அம்பையின் வார்த்தைகளைக் கேட்ட பீஷ்மர் உடனே தகுந்த துணையுடன் அவளை சால்வனிடம் ஒப்புவிக்கும்படி அனுப்பிவைத்தார். பிறகு அவளுடைய தங்கைகளான அம்பிகை அம்பாலிகை என்ற இருவரையும் விசித்திர வீரியனுக்கு வெகு விமரிசையாக விவாகம் செய்துவைத்தார்.

இது இப்படி இருக்க, அம்பையானவள் சால்வனிடம் சென்று தன்னை ஏற்றுக்கொள்ளும்படி வேண்டினள்.

ஆனல் அவன் என்ன தெரியுமா சொன்னன். "பல அரசர்களின் மத்தியில் என்னைத் தோற்கடித்து சிறை செய்து சென்றர் பீஷ்மர். அவரால் ஜெயிக்கப்பட்ட உன்னை நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன். இந்த அவமானத்தை என்னல் தாங்க முடியவில்லை. நீ அவரிடமே திரும்பிப் போய்விடு" என்று கண்டிப்பாகச் சொல்லி இவளை மணக்க மறுத்துவிட்டான்.

பாவம்! அம்பை சால்வனிடம் அவமானமடைந்து திரும்பி பீஷ்மரிடமே வந்தாள். அவர் விசித்திர வீரியனைப் பார்த்து "தம்பி! இதோ அம்பை உன்னை மணக்கச் சித்தமாக இருக்கிறள். சால்வன் அவளை நிராகரித்துவிட்டான். இனி ஒரு தடையுமில்லை" என்று சொன்னர். ஆனல் அவன் "அவள் தன் மனதில் சால்வனை வைத்து பூஜிக்கிறள். அது ஒருக்காலும் மாருது. இப்படி வேறு ஒரு புருஷனிடம் மனதைப் பறிகொடுத்திருக்கும் ஒரு பெண்ணை நான் விவாகம் செய்து கொள்ள மாட்டேன்" என்று சொல்லிவிட்டான்.

இப்படி இருவராலும் நிராகரிக்கப்படவே, அம்பை பீஷ்மரின் கால்களில் விழுந்து "என்னை இக்கதிக்கு ஆளாக்கியது நீங்கள்தான். ஆகையால் என்னை நீங்கள் விவாகம் செய்துகொள்ள வேண்டும்" என்று வற்புறுத்தினள்.

பீஷ்மர் என்ன சொல்லி இருப்பார் யோசித்துப்பார்!?

"நான் என் உடலில் உயிர் உள்ளவரை பெண்களை நினைப்பதில்லை என்று சபதம் செய்திருக்கிறேன். என் பிரதிக்ஞையைப் பொய்யாக்க முடியாது" என்று சொல்லி மறுபடியும் விசித்திர வீரியனை பல வழிகளில் வற்புறுத்தினர். ஆனல் அவன் பிடிவாதமாக மறுத்துவிட்டான்.

"நீ மறுபடி சால்வனையே போய் கேள். பிடிவாதமாக அவனிடம் மன்றடினல் அவன் மனம் இரங்கும்" என்றர் பீஷ்மர். ஆனல் அம்பை சால்வனிடம் மறுபடி போக வெட்கப்பட்டு பீஷ்மரையே கல்யாணம் செய்துகொள்ளும்படி வற்புறுத்தினள். பல ஆண்டுகள் பீஷ்மர் அரண்மனையிலேயே கழித்தாள். ஆனல் பீஷ்மர் மனம் மாறவில்லை.

கடைசியாக அம்பை சால்வனை மறுபடி காணப் புறப்பட்டாள்.

"மற்றெருவன் ஜயித்த பெண்ணை மணந்து கொண்டால் என் கௌரவம் என்ன ஆவது போ போ!" என்று திருப்பி அனுப்பிவிட்டான்.

பாவம் அம்பையின் நிலை பரிதாபமாக இருந்தது. இங்கிருந்து, அங்கும் அங்கிருந்து இங்கும் "எனக்கு வேண்டாம். எனக்கு வேண்டாம்" என்று அலைக்கழிக்கப்பட்டாள் அழகி அம்பை. தன் நிலையை நினைத்து நினைத்து கண்ணீர் விட்டாள். இப்படியே ஆறு வருஷங்கள் கழிந்துவிட்டன. காலையில் பறிக்கப்பட்ட மெல்லிய இதழ்களை உடைய ரோஜாபோல இளமை மின்னும் உடலை உடைய அம்பை அப்படிப்பட்ட ரோஜா நடுப் பகலில் பாலை வனத்தில் எறியப்பட்டால் என்ன கதியாகுமோ அப்படித் துடிதுடித்து வாடினள் அம்பை. பீஷ்மர் தனக்கு இழைத்த அநீதியை எண்ண எண்ண அவர்மேல் கோபம் பொங்கி எழுந்தது. பல அரசர்களிடமும் போய் தன் நிலையைச் சொல்லிமுறையிட்டு," "பீஷ்மரைப் போருக்கு அழைத்து யுத்தத்தில் அவரை வெட்டி வீழ்த்துங்கள்" என்று சொல்லி தன் வஞ்சம் தீர்த்துக்கொள்ள வழி தேடினள். ஆனல் பீஷ்மர் என்றல் எல்லாருக்கும் நடுக்கம். ஆகையால் ஒருவரும் அவள் வார்த்தைக்கு மதிப்புக் கொடுக்கவில்லை.

இதனல் இன்னும் கொதிப்படைந்த அம்பை பீஷ்மரைக் கொல்ல முருகப் பெருமானை நினைத்துக் கடுந்தவம் புரிந்தாள்.

அவள் தவம் செய்துகொண்டே இருக்கட்டும் தம்பி! நாம் பிறகு அவளை சந்திப்போம். எனக்கு பசிக்கிறது. இன்றைக்கு ஒரு இடத்தில் கொழுக்கட்டை "பார்ட்டி" போய் கவனித்துவிட்டு வருகிறேன்!... உனக்கும்—கொண்டுவரச் சொல்கிறயா? எனக்கு மிஞ்சினல் உனக்குத் தருகிறேன்.

போனேம். கீழே கீழே கீழே போய்க்கொண்டே இருந்தோம். பாறைகளில் உருண்டு போவதை அறிந்தோம். கீழே பெரிய சமுத்திரம் அலைபொங்கி சப்திப்பது கேட்டது. நாங்கள் பாதாளத்துக்குப் போய்க்கொண்டே இருந்தோம்.

42

## அத்தியாயம்-4 பாதாள யாத்திரை

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

உருண்டு தூங்க ஆரம்பித்தான். இதுதான் சமயமென்று உடனே ராஜசிம்மன் துரிதமாக வேலைசெய்தான். அங்கிருந்த பெரிய மரத்தின் கிளையைத் தன் கத்தியால் கூராக்கி அதை நெருப்பில் வைத்து எரியவிட்டு அந்த மரத்தை 9 பேரும் தூக்கிக்கொண்டு வந்து ஒற்றைக் கண்ணனின் நெற்றிக் கண்ணில் சொருகிவிட்டனர். அவ்வளவுதான் ராட்சதன் துடிதுடித்துக் கத்தினன். குகையே அதிர்ந்தது. ரத்தம் ஆறுபோல ஓடிற்று. ஓலமிட்டான் ஓடினன். குகை முழுதும் கையால் தடவி ராஜசிம்மனைத் தேடினன். ஆனல் அவர்கள் பத்திரமாகப் பதுங்கிவிட்டனர்.

ராட்சதனின் கூக்குரலைக் கேட்ட பக்கத்து குகைகளில் இருந்த ராட்சதர்கள் வந்து "என்ன" என்று கேட்டனர்.

"ஐயோ என் கண்ணைக் குத்திப் பொட்டையாக்கிவிட்டானே" என்று கதறினன் ராட்சதன்.

"யார்?" என்று கேட்டனர் மற்ற ராட்சதர்கள்.

"யாருமில்லை! யாருமில்லை!" என்று குதித்தான் வலி தாங்காமல் ராட்சதன்.

"யாருமில்லையானல் ஏன் இப்படிக் குதிக்கிறய்"

"உனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டனர்.

இரவு முழுதும் ராட்சதன் துடித்துக் கொண்டிருந்தான். ராஜசிம்மனும் தன் காரியத்தைக் கவனித்துக் கொண்டிருந்தான். மூன்று மூன்று ஆடாகச் சேர்த்து அதன் அடிவயிற்றேடு தன் நண்பர்கள் ஒவ்வொருவராகக் கட்டிவிட்டுத் தானும் ஒரு கொழுத்த ஆட்டின் அடிவயிற்றேடு ஒட்டிக்கொண்டான்.

காலையில் ராட்சதன் குகை வாசலின் கல்லை அகற்றிவிட்டு ஆடுகளை வெளியே விட்டான். ஆடுகள் வெளியே போகும்போது குகைவாசலில் உட்கார்ந்துகொண்டு ஒவ்வொரு ஆட்டின் முதுகையும் கையால் தடவிப் பார்த்து வெளியே அனுப்பினன். தன் விரோதிகள் தப்பிச் செல்லாமல் இருக்கத்தான் இப்படி அந்த ராட்சதன் செய்தான். ஆனல் ஆடுகளின் அடி வயிற்றில் கட்டப்பட்டிருந்த ராஜ சிம்மனின் ஆட்களை அவனல் கண்டுபிடிக்க முடியவில்லை. குகைக்கு வெளியேவந்த ராஜ சிம்மனும் நண்பர்களும் தப்பினேம் பிழைத்தோமென்று அவிழ்த்துக்கொண்டு எடுத்தனர் ஓட்டம்.

## அதிசயம் ஆனல் உண்மை

● நியூயார்க்கில் Ezechiel Eads என்ற ஒருவன் இருந்தானம். இவனுக்குக்காதுகளே கிடையாது. காது இருக்க வேண்டிய இடத்தில் துவாரங்களும் கிடையாது. ஆனல் இவன் சப்தத்தைக்கேட்பது எப்படித் தெரியுமா? வாயை அகலத் திறந்துகொண்டிருப்பான். சப்தம் வாய்வழியாக உள்ளே சென்று மூளைக்கு அறிவிக்கும். இப்படி வாய்வழியாகவே இவன் பிறர்பேசுவதைக் அறிந்துகொண்டுவிடுவானம். இவன் 1884-ம் வருஷம் இறந்துவிட்டான்.

● கர்டிஸ் பரம்பரை என்ற ஒரு குடும்பத்தார் 224 வருஷமாக டாக்டர் தொழிலை விடாமல் பார்த்து வருகிறர்கள். பிள்ளைக்குப் பிள்ளை அவனுக்குப் பிள்ளை எல்லோரும் டாக்டர்கள்தானம். 1927-ம் வருஷம் செப்டம்பர் 27-ம் தேதி வரை இவர்கள் குடும்பத்தில் தலைமுறை தலைமுறையாக டாக்டராகவே இருந்துவந்தார்களாம். 224 வருஷம்! அடேயப்பா.

● ஜப்பானில் ஒரு மரம் இருக்கிறது அதன் வயது 500 வருஷம். ஆனல் அதன் உயரம் ஜப்பானியர்களைப் போலவே 3 அடி உயரம்தான்.

● சைனவிலுள்ள ஒரு மதகுரு தன் விரலின் நகத்தை 27 வருஷங்களாக வளர விட்டிருக்கிறர். அதன் நீளம் என்ன தெரியுமா? 22¾ அங்குலம்தம்பி! கையில் செடி முளைத்தது போல!

● மத்தில்டி கோவெக்ஸ் என்ற அமெரிக்கமாது 1917-ம் வருஷம் தான் இறப்பதற்கு முன்னல் தன்னுடைய ஆஸ்தியான 5000,000,000 க்ரோனன் (Kronen) (நோட்டுக்கள்) களைக் கொளுத்தினளாம், ஏன் தெரியுமா? அவளுடைய பூனைக்குட்டிகளிடம் அவள் உறவினர்கள் அன்பாக நடந்துகொள்ளவில்லையாம். அதனல் தன் ஆஸ்தி முழுவதையும் கொளுத்திவிட்டு இறந்தாளாம். எப்படி இருக்கிறது.

---



---



விசையை அவன் அழுத்தியதும் நாங்கள் போய்க் கொண்டிருந்த பாதை படீரென்று வெடித்துப் பிளந்தது. நாங்கள் தலை குப்புற விழுந்தோம். அந்தப் பிளவு பாதாளத்துக்குப் போவது போலிருந்தது உருண்டு உருண்டு

41

# டாம் ஜிம் ஜாக்

சின்னக்கதை

"கிட்டு"

## மந்திர சைக்கிள்

கிட்டு ஒரு ஏழைப் பையன். சிறு வயதிலேயே குடும்பத்தைக் காப்பாற்றும் கடமை அவனுக்கு ஏற்பட்டுவிட்டது. அதனால் வேலைசெய்யக் கிளம்பி விட்டான். கிட்டு பக்கத்து ஊரிலிருந்த ஒரு தாத்தாவின் வீட்டில் வேலை செய்வந்தான். மாதா மாதம் அவர் கொடுக்கும் சம்பளத்தை ஊருக்கு அனுப்பிவிடுவான். இப்படியே ஒருவருஷமாயிற்று. ஒருநாள் கிட்டுவுக்குத்தன் அம்மாவைப் பார்க்கவேண்டும் போல ஆசையாக இருந்தது. தன் விருப்பத்தைத் தாத்தாவிடம் சொன்னபோது அவர் கிட்டுவிடம் வாத்து ஒன்றைக் கொடுத்து "இதைக் கொண்டுபோ. இதன் காதில் நான் சொல்லும் மந்திரத்தைச் சொன்னால் இது உடனே ஒரு தங்க முட்டையிடும்" என்ற மந்திரத்தையும் சொல்லி வாத்தைக் கொடுத்துவிட்டு "ஆனால் நடுவழியில் எங்கேயும் தங்காதே. தங்கினயோ வாத்தை யாராவது தட்டிக்கொண்டுபோய் விடுவார்கள்" என்று சொல்லி அனுப்பினார்.

கிட்டுவும் கிளம்பினான். நடுவழியில் அவனுக்குப் பசியும் தாகமும் தாங்க முடியாமல் ஏற்பட்டது. அப்போது தூரத்தில் ஒரு சிறு வீடு தென்பட்டது. அதை நோக்கிப் போனான். அந்த வீட்டுக்காரன் அப்போதுதான் தோசை வார்த்துக் கொண்டிருந்தான். அதன் வாசனை கிட்டுவை அங்கு விட்டு நகரவிடாமல் செய்தது. அதிகம் சொல்வானேன். கிட்டு அங்கேயே இளைப்பாறத் தங்கிவிட்டான். தோசை தின்று களைப்பாறிய பிறகு கிட்டு தாத்தாவின் வார்த்தையைப் பரீட்சிக்க வாத்தை எடுத்து வைத்துக்கொண்டு அதன் காதில் மந்திர வார்த்தையைச் சொன்னான். என்ன ஆச்சரியம் அது! 'டக்'கென்று ஒரு பொன் முட்டையை இட்டது. இதைக் கதவிடுக்கின் வழியாகக் கவனித்துக் கொண்டிருந்தான் அந்த வீட்டுக்காரன். கிட்டு தூங்கியதும் தன்னிடமிருந்த ஒரு சாதாரண வாத்தை அவன் பக்கத்தில் வைத்துவிட்டு பொன்வாத்தை எடுத்து ஒளித்து வைத்துக் கொண்டான்.

கிட்டு வீட்டுக்குப்போனதும் அம்மாவிடம் தன் அதிசய வாத்தைப்பற்றிச் சொல்லி அதை பொன் முட்டையிடும்படி செய்தான். ஆனால் வாத்து முட்டையிடவில்லை அது மந்திர வாத்தாக இருந்தாலல்லவா! தான் தாத்தாவின் வார்த்தையை மறந்து வழியில் தங்கியதை நினைத்து வருத்தமடைந்த முருகன் மறுபடி தாத்தாவின் வீட்டிற்குப் போனான். ஒரு வருஷம் வேலை செய்தான் வருஷக் கடைசியில் ஊருக்குக் கிளம்பும் போது தாத்தா ஒரு சின்ன சைக்கிள் வண்டியைக் கொடுத்து "இது மந்திர சைக்கிள். நீ ஏறி உட்கார்ந்து" பிளிப்பட்டி, பிளிப் பட்டி, பிளிப். விலிப்பட்டி, விலிப்பட்டி விலிப்" என்று சொன்னாயானால் சைக்கிள் தானாக ஓடும் நிற்க வேண்டுமானால் "லோப்பிட்டி, லோப்பிட்டி லோப், ஸ்டாப் பிட்டி, ஸ்டாப்பட்டி ஸ்டாப்" என்று சொல்... ஆனால் போன தடவையைப் போல வழியில் நிற்காதே" என்று சொல்லி அனுப்பினார். கிட்டுவும் மந்திரத்தைச் சொல்லி விட்டுச் சைக்கிளில் ஏறிக்கொண்டான் சைக்கிள் வெகு வேகமாகப் பறந்து சென்றது.

ஆனால் கிட்டுவுக்கு பாதி வழிவந்ததும் பசி காதை அடைத்தது. அதே வீட்டிற்குப் போனான். அந்த மனிதனும் கிட்டுவை அடையாளம் கண்டுகொண்டு அவனை ரொம்ப உபசாரத்தோடு வரவேற்று உணவளித்தான். கிட்டு இந்தத் தடவை தூங்காமல் உடனே சைக்கிளில் ஏறிக்கொண்டான். கிட்டு மந்திர வார்த்தையைச் சொன்னதும் சைக்கிள் தானாக ஓடுவதை ஒளிந்திருந்து கேட்ட அந்த மனிதன் உடனே வெளியே ஓடிவந்து, "அம்பி! அம்பி! கேழ்வரகுமாவில் லாடு செய்தேன். ரொம்ப ருசியாக இருக்கும். வாங்கிக் கொண்டுபோ. வழியில் பசித்தால் உதவியாக இருக்கும்" என்றழைத்தான். கிட்டுவும் சைக்கிளைவிட்டு இறங்கி உள்ளே போனான். மறுநிமிஷம் கிட்டுவின் மந்திர சைக்கிள் மாயமாக மறைந்தது. அந்த இடத்தில் அதேபோல ஒரு சைக்கிளை வைத்துவிட்டான் அந்த ஆள். கிட்டு மறுபடி வந்து ஏறிக்கொண்டு மந்திரத்தைச் சொன்னபோது சைக்கிள் ஓடவில்லை. பாவம் கிட்டு தன் வீட்டுக்குக் கால்வலிக்க அதை உருட்டிக் கொண்டே போய்ச் சேர்ந்தான். அவனுக்கு அழுகையாக வந்தது. மறுபடி தாத்தாவைப் பார்க்க வெட்கமாக இருந்தது.

(8-ம் பக்கம் பார்க்கவும்)




### 11. மந்திரம் தெரிந்தது.

விக்ரமனும் மந்திரவாதியும் அங்கு வைக்கப்பட்டிருந்த திராட்சை ரசத்தை ஊற்றி ஊற்றிக் குடித்துக் கொண்டே பேசிக்கொண்டார்கள். "விக்ரமா! நீயோ ராஜாவா போயிட்டே உனக்கு ஒரு ராணி இல்லாமலிருப்பது ரொம்பக்குறை! என்ன சொல்றே! அந்த ஆந்தைப் பெண்ணின் மனதை நான் மாற்றி விடுகிறேன். கல்யாணம் செய்துகொள்" என்றான் மந்திரவாதி.

ஆனால் விக்ரமன் "எனக்கு இப்போது அவளைப்பிடிக்கவில்லை... நீ கொஞ்சம் கூடக்கவலைப்படாதே" நான் என் ராணிக்கு ஏற்பாடு செய்து விட்டேன். என் அண்ணாவோடு கிளியாக மாறியிருக்கிறார்களே இரண்டு பயல்கள், அவர்களில் ஒருவன் ஒரு சிமிழை வைத்திருந்தான். அந்தச்சிமிழை சில நாட்களுக்கு முன்பு நான் தட்டிக் கொண்டு வந்துவிட்டேன். அவன் காட்டில் நன்றாகக் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தான். நான் எடுத்தது அவனுக்குத்தெரியாது. அந்தச் சிமிழில்தான் என் ராணி இருக்கிறாள்—"ஏதேது அவன் நம்மைவிட பெரிய மந்திரக்காரன் போலிருக்கிறதே என்று விழிக்கிறாயா?"... அவன் மந்திரக்காரனுமல்ல 'உன்னைப்போல கருப்புப்பொடியைக் கொடுத்து கிளியாக்கவும் அவனால் முடியாது' அந்தச்சிமிழைத் திறந்து பார்த்தேன். உள்ளே ஒரு விநோதமான சிலந்திப்பூச்சி இருந்தது. "யாரோ பைத்தியக்காரன் சிலந்திப்பூச்சியைப் பிடித்து வைத்திருக்கிறான் என்றுதான் நினைத்தேன். ஆனால் பிறகு யோசித்ததில் இதில் ஏதாவது விசேஷம் இருந்தாலும் இருக்கும் என்று எண்ணி நேரே அரண்மனைக்கு வந்து நீ கொடுத்திருந்த மந்திரக் கண்ணாடி முன் அதை வைத்து "இந்தச் சிமிழைப்பற்றிய கதையைச் சொல்" என்றேன். உன் கண்ணாடி தான் நடந்த நடக்கப்போகிற நடந்து கொண்டிருக்கிற விஷயங்களைச் சொல்லி விடுமே!"

"இது சிலந்திகளுக்கு அரசனான ராஜாச் சிலந்தி இதைக்கொண்டு வருபவர்களுக்குத் தன் அழகியபெண் 'மனோரமா' வைக் கல்யாணம் செய்து கொடுப்பதாக 'டும் டும்' ராஜா தீர்மானம் செய்திருக்கிறார்! மனோரமா ரொம்ப அழகிய பெண். அவளைப் போன்ற அழகி இந்த உலகத்தில்யாருமில்லை. அவளை அடையத்தான் வீரகேசரி என்ற அந்த இளைஞன் அனேக கஷ்டங்களை அனுபவித்து இதைப் பிடித்து வந்திருக்கிறான். இப்போது நீ அதைத் திருடிக் கொண்டு வந்துவிட்டாய். இது முறையல்ல" என்று ஏதேதோ புத்தி சொல்ல ஆரம்பித்துவிட்டது உன் கண்ணாடி. அதன் புத்தியை எல்லாம் யார் கேட்கிறார்கள். நமக்கு வேண்டியது விஷயம். அது தெரிந்துவிட்டது. நான் நாளைக்கே கிளம்பப்போகிறேன்" என்றான் விக்ரமன்.

"எங்கே?" என்றான் மந்திரவாதி போதை ஏறிவிட்டதால் அவனுக்கு தன் சுய நினைவில்லை.

'டும் டும்' ராஜாவைப் பார்க்கத்தான். மனோரமாவைக் கல்யாணம் செய்துகொள்ளத்தான் என்று பலமாகச் சிரித்தான் விக்ரமன்.

தன்னுடைய சிலந்திச் சிமிழைக் களவாடியவனும் விக்ரமன் தான் என்பதை அறிந்த வீரகேசரிக்கு உடல் துடித்தது.

சிறிது நேரத்தில் மந்திரவாதி, ஷேய்யர்கன் விக்ரமன் எல்லோரும் மயங்கித் தரையில் உருண்டு விட்டனர்.

உடனே வீரகேசரி ஆந்தைப்பெண்ணை அழைத்து "நீ எங்களுக்குச் செய்த உதவியை நாங்கள் என்றைக்கும் மறக்கமாட்டோம். உன்னை உரு மாற்றுவதோடு உன் காதலனையே உனக்குக் கணவனுக்கு இரேம் சிறிது நேரம் பொறுத்திரு" என்று சொல்லிவிட்டு காளிங்கனையும் அழைத்துக்கொண்டு மூவரும் தங்கள் உருவத்தை மாற்றிக்கொள்ள அந்த அரண்மனையை விட்டு சற்று தூரம் சென்றனர்.

வீரகேசரி காளிங்கனைப் பார்த்து "காளிங்கா அந்த ஆந்தைப்பெண்ணை நான் கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை. அரசகுமாரிகோ கல்யாணமாகி விட்டது. ஆகையால் நீ தான் அவளை மணக்க வேண்டும்" என்றான் குறும்பாக.

காளிங்கனுக்கு உண்மை தெரியாததால் "வீரகேசரி இது நியாயமில்லை. நீ முதலில் அவளை மணப்பதாக ஒப்புக்கொண்ட பிறகு இப்படிச் சொல்வது அழகல்ல. நான் என் காதலி நிர்மலாவைக் கண்டு பிடிக்கும் வரை வேறு எந்தப் பெண்ணையும் தொட மாட்டேன்" என்றான்.

"உன் காதலி நிர்மலாவாகவே அந்த ஆந்தைப் பெண் இருந்து விட்டால் என்ன செய்கிறது என்று தான் பார்க்கிறேன்"

"என் நிர்மலாவா? ஒருக்காலும் இருக்காது" என்றான் காளிங்கன்.

"என்னவோ அப்பா சொல்லிவிட்டேன். அந்த ஆந்தை உன் நிர்மலாவாக மாறினால் பிறகு நீதான் வருந்த வேண்டும்"

"சண்பா விளையாடாதே என் மனதைப் புண்படுத்தாதே" என்றான் காளிங்கன். அவன் முகம் வருத்தத்தால் வாடிவிட்டது.

உடனே வீரகேசரி இனி விளையாடுவது அழகல்ல என்று உண்மையைச் சொன்னான். காளிங்கனுக்குத் தன் காதுகளை நம்பவே முடியவில்லை.

# ஒற்றைக் கண் ராட்சதன்

ரொம்ப ரொம்ப வருஷங்களுக்கு முன்னாலே நடந்த கதை தம்பி இது. அப்போதெல்லாம் ராட்சதர்கள் என்று சொல்லப்படும் பயங்கரமான உருவமும் பலமும் உள்ள மனிதர்கள் வசித்துவந்தனர்.

அந்தக்காலத்தில் விநோதபுரி என்ற ராஜ்யத்தை விக்ரமன் என்ற அரசன் ஆண்டுவந்தான். அவனுக்கு ராஜசிம்மன் என்ற ஒரு மகன் இருந்தான். அவன் மிகுந்த பராக்கிரமசாலி. மகா புத்திசாலி. வில்வித்தை வாள்வித்தை குத்துச்சண்டை குதிரையேற்றம் எல்லாவற்றிலும் சிறந்து விளங்கினான் அவன். அவனுக்கு பனிரண்டு நண்பர்கள். அந்தப் பன்னிரண்டுபேரும் பெரிய வீரர்கள் ஒருசமயம் இந்தப் பனிரண்டு பேர்களுடன் ராஜசிம்மன் யாத்திரை கிளம்பினான். எதற்காகத் தெரியுமா? பல தேசங்களையும் மனிதர்களையும் பார்ப்பதற்காக.

ஒரு பெரிய கப்பலில் ராஜசிம்மனும் அவன் நண்பர்களும் புறப்பட்டனர். பல தேசங்களுக்குப் போனார்கள். இப்படி கடலில் பிரயாணம் செய்து கொண்டிருக்கும்போது. ஒரு சமயம் கப்பலில் இருந்த உணவு எல்லாம் தீர்ந்துவிட்டது. புதிய உணவு நிரப்பிக்கொள்வதற்காக எங்காவது தரை தெரிகிறதா என்று மிகுந்த ஆவலோடு பார்த்துக்கொண்டு வந்தான் ராஜசிம்மன். வெகுநாள் பசியால் வாடிக் கஷ்டப்பட்ட பிறகு ஒருநாள் வெகு தூரத்தில் தென்னைமரங்கள் தெரிவதைக் கண்டு அதை நோக்கிக் கப்பலை ஆவலுடன் செலுத்தினான்.

அது ஒரு தீவுதான். ஆனால் அந்தத் தீவில் வசிப்பவர்கள் ராட்சதர்கள். பயங்கரமான உடலையும் உருவத்தையும் பலத்தையும் உடையவர்கள். அவர்களுக்கு எல்லாமே ஒரு கண்தான். அதுவும் நெற்றியில்தான் இருக்கும் இந்த விபரமெல்லாம் ராஜசிம்மனுக்குத் தெரியுமா? தரையைக் கண்டதும் குதித்து ஓடினார்கள் ராஜசிம்மனும் அவன் நண்பர்கள் பனிரண்டுபேரும் கப்பலை பத்திரமான ஒரு இடத்தில் நிறுத்திவிட்டு. சிறிது தூரம் சென்றதும் ஒரு பெரிய குகை தென்பட்டது. அதன் வாசலில் ஆட்டுத்தோலும் இறைச்சியும் உலர்த்தப்பட்டிருந்தன. தானியங்களும் ஏராளமாகக் குவிக்கப்பட்டிருந்தது. அவைகளைக் கண்ட நண்பர்கள்,

"நாம் எதிர்பார்த்துவந்தது, நமக்காக இங்கு காத்திருக்கிறது. எடுத்துக்கொண்டு போகலாம். நம்மைத் தடுக்க இங்கு யாருமில்லை" என்றனர்.

ஆனால் ராஜசிம்மன் "அது தவறு...இதன் சொந்தக்காரன் வந்ததும் அவனைக் கெஞ்சிக் கேட்டு வாங்கிப் போவதுதான் முறை. அதுவரை காத்திருப்போம்" என்று சொல்ல எல்லோரும் குகைக்குள் நுழைந்தனர். அந்தக் குகை பிர்மாண்டமாக இருந்தது. உள்ளே ஒரு பெரிய மேஜை மீது ஏராளமான உணவு பொருள்களும் பழங்களும் பரப்பப்பட்டிருந்தன. ராஜசிம்மனும் அவன் நண்பர்களும் பசியோடிருந்ததால் அந்த ஆகாரத்தையும் பழங்களையும் வயிறு நிறையத் தின்றுவிட்டு ஒரு மூலையில் படுத்து இளைப்பாறிக்கொண்டு அந்தக் குகையின் சொந்தக்காரனின் வரவிற்காகக் காத்திருந்தனர்.

இருட்டும் சமயத்தில் குகை வாசலில் பயங்கரமான சப்தம் கேட்டது. மந்தை மந்தையாக ஆடுகள் உள்ளே வந்தன. அதற்குப் பின்னால் ஒரு பிர்மாண்டமான உருவம் நின்றுகொண்டிருந்தது. குகை முழுதும் அடைத்துக்கொண்டு நிற்கும் அந்தப் பெரிய உருவத்தைக் கண்ட ராஜசிம்மன் நண்பர்கள் நடுநடுங்கிவிட்டனர். நெருப்பைப்போல அந்த உருவத்தின் நெற்றியில் ஒரு கண் ஜ்வலித்துக்கொண்டிருந்தது. அந்த ஒற்றைக் கண் ராட்சதன் தோளில் இரண்டு பெரிய மரங்களை வேரோடு பிடுங்கி வைத்துக்கொண்டிருந்தான். அந்த மரங்களைக் கீழே போட்ட சப்தத்தினால் ராஜசிம்மனுக்கு காது செவிடாகிவிட்டது. உள்ளே வந்ததும் ஒற்றைக் கண் ராட்சதன் இரண்டு பெரிய கற்களை எடுத்து ஒன்றோடொன்று பலமாகத் தட்டினான். உடனே அவைகளிலிருந்து நெருப்பு உண்டாயிற்று. அதனால் அந்த மரத்தைப் பற்றவைத்தான் உடனே குகையில் பிரகாசமான வெளிச்சம் உண்டாயிற்று. அந்த வெளிச்சத்தில் மூலையில் நடுங்கியபடி பதுங்கிக்கொண்டிருக்கும் ராஜசிம்மனையும் அவன் நண்பர்களையும் பார்த்துவிட்டான் ராட்சதன். "என் குகைக்குள் இவ்வளவு துணிச்சலுடன் வந்த நீங்கள் யார்?" என்றான் ராட்சதன் தன் இடிபோன்ற குரலில்.

ராஜசிம்மன் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு "நாங்கள் வெகுதூரத்திலிருந்து வருகிறோம். கப்பலில் உணவு தீர்ந்துவிட்டது. அதற்காக உங்களிடமுள்ள உணவில் சிறிது தரும்படி கெஞ்சிக் கேட்டு வங்கிப்போகக் காத்திருக்கிறோம்" என்றான்.

"உங்கள் கப்பல் எங்கே இருக்கிறது?" என்று கேட்டான் ராட்சதன்.

அப்போது தான் ராஜசிம்மன் தன்தவறை உணர்ந்தான். கப்பல் இருக்குமிடத்தைச் சொன்னால் இந்த முரட்டு உருவம் அதை உடைத்துவிட்டால் என்ன செய்வதென்ற பயம் வந்தது. ஆகையால் உடனே "பிரபுவே கப்பல் இருந்தால் இங்கு எதற்காக வருகிறோம். கப்பல் உடைந்து முழுகிவிட்டது. நாங்கள் மட்டும் நீந்தி இந்தத் தீவில் ஒதுங்கினோம். பசியாக இருந்தது. அதோடு ஊர் போக வேறு கப்பல் கட்டவேண்டும்" என்றான்.

ராட்சதன் ஒன்றும் பேசவில்லை. குபீரென்று பாய்ந்து ராஜசிம்மனின் நண்பர்களில் இரண்டு பேரை பிடித்து முறித்து முறுக்குச் சாப்பிடுவது போலத் தின்றுவிட்டுத் தூங்கப் போய்விட்டான். இந்தப் பயங்கரமான செய்கையைக் கண்ட ராஜசிம்மனுக்கு உள்ளம் கொதித்தது. கோபம் பொங்கிக்கொண்டு வந்தது. ராட்சதன் விடும் குறட்டை குகையையே அதிரும்படி செய்துகொண்டிருந்தது. ராஜசிம்மனும் மற்ற பத்துப் பேரும் கத்தியை உருவிக்கொண்டு ராட்சதனைக் குத்திக் கொன்று தப்பிவிடுவது என்று அவன் தூங்குமிடத்தை நெருங்கினர். கத்திகளையும் ஓங்கிவிட்டனர். உடனே சட்டென்று ராஜசிம்மன் "நிறுத்துங்கள்" என்றான் மெதுவான குரலில்.

"குகையின் வாசலைப் பெரிய கல்லைக் கொண்டு மூடி அல்லவா இருக்கிறான். இப்போது இவனைக் கொன்றுவிட்டால் குகை வாசலைத் திறப்பது யார்? நம்மால் அந்தக் கல்லை அசைக்கவே முடியாதே! பிறகு இவனைக் கொன்று என்ன பயன். நாமும் இங்கேயே அல்லவா இறக்கவேண்டும்" என்று சொல்லித் தடுத்துவிட்டான். தப்பிக்க வேறு உபாயத்தைப்பற்றி அன்றிரவு முழுதும் யோசனை செய்து கொண்டே இருந்தனர்.

பொழுது விடிந்தது. வழக்கப்படி ராட்சதன் எழுந்ததும் இரண்டுபேரை முறித்துச் சாப்பிட்டுவிட்டு ஆடுகளை ஓட்டிக்கொண்டு குகையை மூடிவிட்டு வெளியே போய்விட்டான். உள்ளே ராஜசிம்மனும் மற்றவரும் அடைபட்டுக் கிடந்தனர். ராஜசிம்மன் மூளை பலமாக வேலை செய்தது. தப்பிக்க ஒரு வழியையும் கண்டு பிடித்துவிட்டான்.

மாலை ராட்சதன் வரவிற்காகக் காத்திருந்தனர் ராஜசிம்மனும் அவன் நண்பர்களும். ராட்சதனும் ஆட்டுமந்தையோடு வந்தான் குகைக் கதவு மறுபடி அவனால் மூடப்பட்டது. இரவு படுக்கப் போகுமுன் வழக்கப்படி இரண்டுபேரைச் சாப்பிடுவதற்காகப் பிடித்தான். அப்போது ராஜ சிம்மன் "பிரபுவே இன்று உங்களுக்காக ஒரு சுவையான பானம் தயாரித்திருக்கிறேன். அதைச் சாப்பிட்டுவிட்டுப் பிறகு எங்களை ருசிபாருங்கள் ரொம்ப நன்றாக இருக்கும்" என்று சொல்லி ஒரு கிண்ணம் நிறைய சிவப்பான திராட்சை ரசத்தைக்கொடுத்தான். அதை வாங்கிக் குடித்த ராட்சதன் நாக்கால் உதட்டைத் தடவியபடியே "ரொம்ப சுவையாக இருக்கிறதே. இன்னொரு கிண்ணங்கொடு உன் பெயரென்ன? உன்னை மட்டும் கடைசியில் சாப்பிடுகிறேன்" என்றான் ஒற்றைக் கண்ணன்.

"என் பெயர் யாருமில்லை என்று சொல்லிக்கொண்டே கிண்ணங் கிண்ணமாக மதுவை ஊற்றி ராட்சதனுக்குக் கொடுத்தான். ராட்சதனும் சிறிது நேரத்தில் போதை ஏறிமயங்கிக் கீழே விழுந்து

—(7-ம் பக்கம் பார்க்க.)—

## 'ஏசாப்' நீதிக்கதைகள்

### 8. பூனையும் எலியும்

ஒரு வீட்டில் ஏராளமான எலிகள் வசித்துவந்தன அவைகளின் உபத்திரவம் தாங்கமாட்டாமல் அவ்வீட்டுக்காரர் ஒரு கொழுத்த பூனையை வாங்கிக் கொண்டு வந்தார். எதற்காக? எலிகளைப் பயமுறுத்தவும். பூனை அவைகளைப் பிடித்துத் தின்றுவிடும் என்பதற்காகவும் தான். ஆனால் பூனையைக் கண்ட எலிகள் உஷாரடைந்து விட்டன. ஒரு எலியாவது வெளியே வருவதே இல்லை பதுங்கிப் பதுங்கி வாழ்ந்து வந்தன.

பூனை நாளுக்கு நாள் இளைத்துத் துரும்பாகிக் கொண்டுவந்தது. அதற்கோ பசி தாங்கவில்லை. 'ஒரு எலியாவது கிடைக்காதா?' என்று ஏங்க ஆரம்பித்தது. அதற்காக ஒரு தந்திரம் செய்தது.

ஒரு இடத்தில் தன் கால்களைத் தொங்கவிட்டுக் கொண்டு (இறந்துபோன மாதிரி பாசாங்கு செய்துகொண்டு) படுத்திருந்தது. தான் இறந்துவிட்டதாக எண்ணி எலிகள் பயமின்றி அருகில் வரும் உடனே அவைகளை 'அபேஸ்' செய்து விழுங்கிவிடலாமென்பது அதன் எண்ணம்.

இதைப் பார்த்த ஒரு கிழட்டு எலிக்கு உண்மை தெரிந்துவிட்டது. கண்ணை மூடி மூடித் திறக்கும் அப்பாவிப் பூனையாரைப் பார்த்துப் பலமாகச் சிரித்துவிட்டு" பூனையாரே இதனாலெல்லாம் நாங்கள் ஏமாந்து போய்விட மாட்டோம்! நீர் இறந்துபோனபிறகு உமது உடலுக்குள் வைக்கோலைத் திணித்து அந்த உருவத்தைக் கொண்டு வந்து இங்கு வைத்திருந்தாலும் அதன் அருகே வரமாட்டோம் தெரிந்ததா? அப்படி இருக்க இப்போதா அருகில் வருவோம்?" என்றது.

இதனால் என்ன தெரிகிறது? எங்கே நீங்களே சொல்லுங்கள் உங்கள் சாமர்த்தியத்தைப் பார்க்கலாம்.

# சாட்சிக் காரனும் சண்டைக் காரனும்

## வக்கீலும் வாழ்க்கையும்

"சாட்சிக்காரன் காலில் விழுவதைவிட சண்டைக்காரன் காலில் விழுவது மேல்" என்றொரு வாக்கு நம்மிடையே பழக்கத்திலிருந்து வருகிறது. இந்த அபூர்வப் பழமொழியின் கருத்து ரொம்ப ஆழமானது. நீதிஸ்தலத்துக்குச் சென்று சாட்சிக்காரனது உதவியுடன் வாதாடி நீதி காண்பதை விட பேசாமல் நம எதிரியின் காலிலேயே விழுந்து "நல்ல கதி" அடையலாம் என்பதே இதன் கருத்து.

நீதிஸ்தலங்களுக்குச் சென்று நீதி கேட்பதில் இருக்கும் சிரமத்தை இந்த முதுமொழி ரொம்ப அழகாக எடுத்துக் காட்டுகிறது. நீதிஸ்தலத்தில் நீதியே கிடைக்குமோ, என்னவோ என்ற முழுமையான சந்தேகமே இதன் அடிப்படையில் ஒளிந்திருப்பது கொஞ்சம் சிந்தித்துப் பார்ப்போருக்குத் தெரியும்.

இத்தகைய விநோதமான உண்மையான சந்தேகங்களை மனம் விட்டு ஆராய்ச்சிசெய்யும் அரிய சந்தர்ப்பம் சென்னை வக்கீல்கள் சங்கத்தின் ரதன விழாவின் போது நமது பிரதம நீதிபதி ஹரிலால் கானியாவுக்கும், மற்றைய வக்கீல்களுக்கும் கிடைத்தது. இந்த ரதனவிழாவில்கலந்து கொண்ட அனைவரும் உருப்படியான யோசனைகளை எடுத்து விளக்கியிருப்பதுடன், தற்கால ராஜாங்க முறையின் கீழ் நீதி எங்ஙனம் நிற்கிறது என்றும் தெளிவாக்கியிருக்கிறார்கள்.

"சாட்சிக்காரன் காலில் விழுவதை விடச் சண்டைக்காரன் காலில் விழுவது மேல்" என்ற வேதவாக்கு, 'நீதி' பிறப்பதற்கு முன்பிருந்து இன்னும் பல காலத்துக்குப் பின் வரை, நின்று நிலவக்கூடியது என்று நிச்சயமாகக் கூறலாம்.

ஒரு காலத்தில் யாரோ ஒரு மந்திரி தமது ராஜாவிடம் "உங்களுக்கு என்ன சட்டம் வேண்டும், சொல்லுங்கள், அதைச் செய்து விடலாம்" என்று மார் தட்டிக் கூறியதாகப் பழங்கதை உண்டு. இந்தக் காலத்திலும் நமது மந்திரிகள் இம்மாதிரி கூறினால் அதில் வியப்படைவதற்கு ஒன்றும் இல்லை! ஆனால் இந்த சட்டம் 'ஒழுங்காக' இருக்கிறதா என்று பார்க்கும் பொறுப்பு ஒன்று. கூடவே இருப்பது தான் சங்கடம்!

கண்ணுக்கு நேராக, அனுபவத்தில் 'சட்டம்' நம்மிடையே செய்து வரும் விநோதங்களைப் பார்க்கும் போது நமக்குச் சிரிப்புத்தான் வருகிறது. "ஹிந்து" பத்திரிகை கூறுவது போல "பகுத்தறிவுக்கு எளிசாகத்தோன்றும் ஒரு விஷயத்தை சட்டம் சாங்கோபாங்கமாகத் தீர்ப்பது நமக்கு விநோதமாயிருக்கிறது". உண்மையில் எண்ணற்ற பல சமயங்களில் இந்தத் தீர்ப்பு பகுத்தறிவுக்கு நேர் விரோதமாகக் கூட இருந்து விடுகிறது.

நீதி சபையின் முன்னர் நியாயம் படும்பாட்டைப் பார்க்கும்போது நமக்கும் அதன் வல்லமையில் சந்தேகம்தான் ஏற்படுகிறது. இந்த உண்மையை நீதி சபையினரே ஒப்புக்கொள்கிறார்கள் என்பதுதான் விநோதம்.

ஆதியில் நீதி நெறி முறைகளுக்கு இவ்வளவு சிக்கலான கோட்பாடுகளும், இவற்றை விளக்க வக்கீல்களும் தேவையாயிருக்கவில்லை. காலப்போக்கில் சட்டத்துக்குமேல் சட்டமாக நாம் ஏற்றி வந்திருக்கிறோம்.

சட்டங்களுக்கும், அரசாங்க முறைக்கும் இருக்கும் சம்மந்தம் கவனிக்கத்தக்கது! இந்தியாவில் சட்டங்களுக்குக் கணக்கு வழக்கு காண்பதே கடினமாயிருக்கும்போது ருஷியாவிலும், அதையொட்டிய சில நாடுகளிலும் சட்டம் "சுலபமாக" அமைந்திருக்கிறது. இதன் காரணம் அங்கு நிலவும் சமூக நிலையே என்று கூறுகிறார்கள். இதில் உண்மையிருக்கத்தான் செய்கிறது.

சட்டங்களே இல்லாத லட்சிய தார்மீகசமூகஅமைப்புபற்றி இன்றைய உலக நிலையில் கனவு காண்பது வியர்த்தமாகத் தோற்றலாம். ஆனால் இப்படிக்கனவு காண்பதில் தவறு ஏதும்இருப்பதாகக் கூறமுடியாது.

இன்றைக்கு சட்டம் செய்யும் காரியங்களில் பெரும்பகுதி பொய்யான வாழ்க்கை நிலையைப் பற்றிக்கொண்டு நிற்கிறது என்று சொன்னால் அது தவறாகாது. இந்தப் பொய்யான நிலை நிலவுவதன் காரணம் அரசாங்கம், மக்கள் இரு வகுப்பினரிடையேயும் இருக்கிறது. ஜனநாயக அமைப்பில் இந்தப் பிரிவினையை அகற்றி, 'மக்களிடம் இருக்கிறது' என்று ஒரேயடியாகக்கூடச் சொல்லிவிடலாம். மக்களிடையே இன்னும் போதுமான விழிப்பு ஏற்படவில்லை. தனி மனிதனெவ்வொருவனுக்கும் சமூகத்தில் தனியான சர்வசுதந்திர ஸ்தானம் இருப்பதாகக் கருதுவதனால்தான் ஒருவருக்கெதிராக மற்றொருவனைக் காப்பாற்றச் சட்டம் வேண்டியிருக்கிறது.

"எல்லோருமோர்குலம், எல்லோருமோரினம், எல்லோரும் இந்நாட்டு மக்கள்" என்ற கவியின் வாக்கு இன்னும் நடைமுறைக்கு வரவில்லை. என்றும் வருமா என்பதேகூடச் சந்தேகமாயிருக்கிறது.

இந்த நிலையில் சட்டத்தை பொது ஜனத்துக்கு விளக்க வென்று "பிறந்திருக்கும்" வக்கீல்களென்ற தனிவகுப்பு தன் கடமையைச் செவ்வனே உணர்ந்து தக்க முறையில், சட்டங்கள் செய்யுங்காலையில் அவற்றிலுள்ள குறைபாடுகளைக் கூசாது எடுத்துக்காட்ட வேண்டும்.

சென்னை வக்கீல்கள் சங்க ரதனவிழா சட்ட சம்பந்தமான பொதுவான நிலையை அழகாகப் பரிசீலனை செய்திருக்கிறது. இந்தப் பரிசீலனையின் பலனை நடைமுறையில் போதுமான சீர்திருத்தம் வக்கீல்கள், பொது மக்கள் இருசாராரிடையேயும் தோன்றுமென்றே நம்புகிறோம்.



பண்டித நேரு லண்டன் காமன் வெல்த் மகாநாட்டில் எவ்விதக் கருத்தைத் தெரிவிப்பார் என்பது குறித்து பலத்த ஆவல் நிலவுகிறது. இந்தியா குடியரசாக இருப்பது காமன் வெல்த் உறவுக்கு எவ்வித உதவி கொடுக்கும் என்பது குறித்தே இத்தகைய ஆவல் நிலவுகிறது. திரு. ஸ்மட்ஸ் இது பற்றிக் கொண்டிருக்கும் விரோதமான கருத்தை யாரும் ஏற்றுக்கொள்வதாகத் தெரியவில்லை. இந்தியா சுதந்திரக் குடியரசாக இருப்பதனால் காமன் வெல்த் உறவுகளுக்கு பாதகமேதுமில்லை என்றே முடிவேற்படும்.



ஏ. ஷண்முகத்தின் அன்னையார்

நாவலாசிரியர் திரு. ஏ. ஷண்முகம் அவர்களின் அன்னையார், 68-வயது நிறைந்த மூதாட்டி அலமேலு அம்மையார் சமீபத்தில் அமரத்வமடைந்தார். டாக்டர் ஆர். கே. ஷண்முகம் செட்டியார் அவர்களின் சம்பந்தி இவர். பெருங் குடிப்பிறந்து சகலபாக்யங்களையும்படைத்துப் பல்லாண்டு வாழ்ந்து நல்லறம் பல புரிந்த அன்னையாரின் பிரிவால் வாடும் புதல்வர், ஷண்முகத்திற்கும், அவரது சகோதரர்களுக்கும் ஏனைய குடும்பத்தினருக்கும் நமது ஆழ்ந்த அனுதாபங்கள்.



குமாரி ஹேமலதா

ஏப்ரல் 4-ந் தேதி, திங்கட்கிழமை, சென்னை, எழும்பூர் மியூசியம் தியேட்டரில், இந்திய லளித கலைச்சங்க மாணவி குமாரி ஹேமலதா (பந்தநல்லூர் சொக்கலிங்கம்பிள்ளை சிஷ்யை) நடன அரங்கேற்றம், கனம் நீதிபதி ஏ. எஸ். பி. அய்யர் தலைமையில் நடைபெற்றது. பல பத்திரிக்கைக்காரர்களும், மற்றும் பல பிரமுகர்களும் விஜயம் செய்து, நடன உலகில் பிற்காலத்தில் பிரகாசிக்கப்போகும், இவ்விளம் நாட்டிய மணிக்கு புகழ்மாலைகள் சூட்டினர்.

### ஸ்ரீ சரஸ்வதி கான நிலயம்

சென்னை திருவல்லிக்கேணி ஸ்ரீ சரஸ்வதி கானநிலையத்தின் 10-வது வருடாந்தரக் கொண்டாட்டம் சென்ற 20—4—49 புதன்கிழமை மாலை நடை பெற்றது. சென்னை மேயர் ஸ்ரீ எஸ். ராமசாமி நாயுடு அவர்கள் முன்னிலையில் நடந்த இவ்விழாவையொட்டி பல சங்கீதக் கச்சேரிகளும், இனிது நடைபெற்றன.

## அனுபவஞானி

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

பணம் இல்லாமலகூட அவர் அவதிப்பட நேர்ந்திருக்கிறது. யுத்தம் நடைபெற்றுக் கொண்டிருந்ததனால் இந்தியாவிலிருந்து குறிப்பிட்ட அளவுக்குமேல் அமெரிக்காவுக்குப் பணம் அனுப்புவது தடைப்பட்டிருந்ததே காரணமாகும். நாயுடு இது சம்பந்தமாக ஒரு கடிதத்தில் எழுதியிருப்பதாவது "செய்ண்ட் லூயியில்நான் தங்கியிருந்தபோது, கோயம்புத்தூரிலிருந்து என்பேருக்குப் பத்தாயிரம் ரூபாய் வரவழைக்க ஏற்பாடு செய்தேன். கோவையில் என் காரியாலயத்திலிருந்து ரூபாய் பத்தாயிரமும் இம்பீரியல் பாங்கு மூலம் அனுப்ப முயற்சித்ததாகவும் ஆனல் அவ்வளவு பெரிய தொகையை அனுப்பிவைக்க பாங்கு மறுத்துவிட்டதாகவும் தந்தி வந்தது. இந்தத் தந்தியைப் பார்த்ததும் எனக்குத் திகில் ஏற்பட்டுவிட்டது. பணத்துக்கு என்ன வழியென்று தெரியவில்லை. பல வாரங்கள் வரையிலும் எல்லாச் செலவுகளையும் சுருக்கிக் கொண்டு எங்கும் வெளியில் வியாபார நிமித்தம் செல்லாமல் இருக்க வேண்டியதாகிவிட்டது. அது வரையிலும பத்தாயிரம் டாலர் வரையிலுமே நான் பல கம்பெனிகளில் சாமான்களுக்கு ஆர்டர் கொடுத்திருந்தேன்."

ஆயினும் இந்த நிலையை உணர்ந்த அமெரிக்க வியாபாரிகள் சிலர் நாயுடு அமெரிக்காவிலிருந்து இந்தியா சென்றபிறகு தொகை அனுப்பிவைத்தால் போதுமானதென்று கூறி, வலிய அவருக்குத் தேவையானவற்றைக் கொடுத்தார்கள் என்று தெரிகிறது. ஆயினும் தனக்கு இந்தியாவிலிருந்து தேவையான பணத்தை வரவழைக்க முயற்சித்து, நியூயார்க் நகரத்தில் இருந்த இந்திய வர்த்தக கமிஷனரான ஸ்ரீமான் ஹெச். எஸ். மல்லிக் என்ற அதிகாரியை அணுகி உதவி கேட்டபோது திரும்பி இந்தியா செல்வதற்கான தொகையை மட்டும் வேண்டுமானல் இந்தியாவிலிருந்து தருவித்துக் கொடுக்க முடியுமென்றும் அதற்குமேல் தனனல் ஒன்றும் செய்ய இயலாதென்றும் கூறிவிட்டார். எப்படியோ பணத்துக்கு ஒருவாறு வழி பிறந்தது.



## தமிழ் வளர்ச்சிக் கழகம்

(15-ம் பக்கத் தொடர்ச்சி)

தின் 'காய்கறித் தோட்டம்' என்ற நூல் முதலிடம் பெற்றது. 'இயற்கை நூல்' பகுதியில் திரு ஜமதக்னி பரிசு பெற்றார்.

பாராட்டுதலுக் குரியவை எனத் தேர்ந்தெடுக்கப்பட்டவை சிறுவர் இலக்கியப் பகுதியில் திரு. பொ. திருகூடசுந்தரம் எழுதி தமிழ்ப்பண்ணையார் பிரசுரித்த 'கேள்வியும் பதிலும்' என்ற நூலும், திரு. சுத்தானந்த பாரதியார் எழுதி, புதுக்கோட்டை ஓம்கார நூலகத்தார் வெளியிட்ட "பாப்பா பாட்டு" என்ற நூலும், வைத்தியப்பகுதியில் திருமதி பார்வதி ஸ்ரீனிவாசனது "தாய்மையும், குழந்தை வளர்ப்பும்" என்ற நூலும்தான்.

சென்ற ஆண்டிலே 4 பகுதிகளுக்கும் இவ்வாண்டிலே 6 பகுதிகளுக்கும் பரிசுத் தொகையை சென்னை அரசாங்கமே கொடுக்க முன்வந்திருக்கிறது. இவ்வாண்டு விவசாயப் பகுதிப் பரிசுத் தொகையை காசிவாசி ஸ்ரீலஸ்ரீ அருள் நந்தித்தம்பிரான் சுவாமிகள் ஏற்றுக்கொண்டுள்ளார்கள். அவருக்கும் சென்னை அரசாங்கத்திற்கும் எங்கள் மனமார்ந்த நன்றி உரியதாகும்.

பரிசுத் திட்டத்திற்கு நூல் அனுப்பிவைத்த ஆசிரியர்கட்கும், வெளியீட்டகங்களுக்கும் எங்கள் நன்றி உரியது புதிய நூல்கள் வெளியாகும் காலையில் அதில் 2 பிரதிகள் உடனே தமிழ் வளர்ச்சிக் கழகத்திற்கு அனுப்பிவிட்டால் பரிசுத்திட்டத்தில் சேர்க்க சௌகரியமாயிருக்கும்.

ஏ. ஷண்முகம் அவர்களின் அன்னையாரின் குடும்பக் குதூகலக் காட்சி.



லண்டன் சென்றிருக்கும் பண்டித நேரு

## சத்ரபதி

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

படுத்திவிட்டார். அவுரங்கஜீப் ஷாஜா இந்த நிலையைக் கண்டு ஓட்டமெடுத்தவன் பர்மியப் பிராந்தியங்களுள் மறைந்தே போய்விட்டான்.

அவுரங்கசீப் இவ்வாறு சக்ரவர்த்தியாக மகுடம் சூட்டப்பட்டார். டோராவின் பிள்ளை சுலேமான் எ பான் நீண்ட காலத்துக்கு நிர்ப்பந்தமாக விஷமுண்டு மடிந்தான். தனக்குக் குறுக்கே இனி யாரும் இல்லை என்ற கோரமான உணர்ச்சியுடன் அவுரங்கசீப் சிங்காதனத்திருந்து செங்கோல் ஓச்ச ஆரம்பித்தார்.

(தொடரும்)



### திருச்சி சங்கீத விழா

சென்ற 15—4—49-உ வெள்ளிக்கிழமையன்று திருச்சி பைன்ஆர்ட்ஸ் சங்கத்தின் ஆண்டு விழா விமரிசையாகத் தொடங்கி 15, 16, 17, 18 தேதிகளில் இனிது நடைபெற்றது. திருச்சி கலெக்டர் திரு. வி. என். ராஜனைத் தலைவராக உடைய இச்சங்கத்தில் அரியக்குடி, திருவிசைநல்லூர் ராமஸ்வாமி சாஸ்திரிகள், செம்மங்குடி, ஜி. என். பி., ஸ்ரீமதி வசுந்தரா தேவியின் குமாரி வைஜயந்திமாலா ஆகியோர் கச்சேரிகள் செய்து சிறப்பித்தனர்.



# விமர்சனம்

## வ. ரா. மணிமலர் :

(சக்தி காரியாலயம் வெளியீடு. விலை ரூபாய் ஒன்றரை)

வ. ரா. அவர்கள் தமிழ் எழுத்தாளர்களில் முதல்வர் என்று போற்றப்படுபவர். தமிழ் எழுத்துத் துறையில் புதுமையைப் புகுத்த விழைந்த வ. ரா. அதற்குத் தனித்தசோபையும், பொலிவும் ஏற்றியிருக்கிறார் என்றே சொல்லவேண்டும்.

வ. ரா. அவர்களுக்கு அறுபது வயது நிறைந்த காலத்தில் அந்த விழாவைச் சிறப்புறக் கொண்டாடி அன்னாருக்குப் பரிசாக இம்மணிமலரைச் சமர்ப்பிக்க திரு. இ. ஆர். கோவிந்தன், வை. கோவிந்தன், தி. ஜ. ரங்கநாதன் ஆகிய மூவரும் விழைந்தார்கள். இந் நல் முயற்சியின் விளைவே இந்த மலர்.

வ. ரா. பற்றி திரு. டி. எஸ். சொக்கலிங்கம் அவர்கள் எழுதியுள்ள முதற் கட்டுரை அவரை கலிஸ்தீனஸ் என்று விவரிக்கிறது. கலிஸ்தீனஸ் அரிஸ்டாடிலின் சீடர். அலெக் சாந்தரோடு, அவருடைய சரிதத்தை எழுதும் நோக்குடன் வந்தவர். கலிஸ்தீனஸ் அலெக் சாந்தருக்கு செய்ததை வ. ரா. பாரதியாருககுச் செய்தார் என்று கூறுகிறார் திரு. சொக்கலிங்கம். மணிக்கொடியுகம் தமிழ் நாட்டுப் பத்திரிகையுலகத்தில் மிக முக்கியமானது. அந்தக் காலத்தில் தமிழ் இலக்கியத்தில் 'மறுமலர்ச்சி' வேலை ஆரம்பமாயிற்றென்று சொல்லலாம். அந்த மணிக்கொடியுகத்து எழுத்தாளர்களில் முதன்மை வகித்தார் வ. ரா. என்ற உண்மையை திரு. சொக்கலிங்கம் ரொம்ப அழகாக எடுத்துச் சொல்கிறார்.

'வ. ரா. வின் வழி' என்று மகுடமிட்டு திரு. ந. பிச்சமூர்த்தி வரைந்துள்ள கட்டுரை இம்மணி மலருக்குள்ளேயே முக்கிய ஸ்தானம் வகிக்கிறது. 'வ. ரா. மனிதனுடன் பழகுவதில்லை, கொள்கைகளுடன் தான் பழகுகிறார்'' என்று ரொம்பப் பொருத்தமாகச் சொல்லுகிறார் திரு. பிச்சமூர்த்தி ஒரு இடத்தில். வ. ரா. புதிராகத் தோன்றுகிறார் என்று அங்கலாய்க்கும் ஒரு கூட்டத்துக்கு இது போதிய விளக்கமாயிருக்குமா என்பது சந்தேகமாய்த்தான் இருக்கிறது!

"கணபதி ராயன்" என்ற தலைப்பில் திரு. அ. ஸ்ரீனிவாச ராகவன் எழுதியுள்ள கட்டுரை வ. ரா. வின் குணசித்திரத்தில் புதியதொரு சாயலை எடுத்துக் காட்டுகிறது. "கணபதிராயன் தூங்கவில்லை; வ. ரா. வின் இதயத்தில் அறிவாகவும், அனுபவமாகவும் அவன் நிற்கிறான்" என்று விளக்கும் இந்தப் பேராசிரியர் வ. ரா.வை அற்புதமாகக் கண்டுகொண்டிருக்கிறார் என்றே சொல்லத் தோன்றுகிறது.

"குற்றம் சாட்டுகிறேன்" என்ற 'சிட்டி'யின் கட்டுரை ஹாஸ்ய ரசனையுடன் வ. ரா.வின் இலக்கியத்தைப்பற்றியும், சில தனி சம்பவங்கள் பற்றியும் பேசுகிறது. "நவயுகத்து நாயகன்" என்ற திரு. ஏ. ஷண்முகத்தின கட்டுரை வ. ரா.வுடன் அவர் கண்டபேட்டியை சித்தரிக்கிறது.

மற்றும் எண்ணற்ற பலர் இம்மணி மலரில் இனிமையாக எழுதியிருக்கிறார்கள். மேலும் புகைப்பட இணைப்பும் இருக்கிறது. ரூபாய் ஒன்றரை இந்த மலருக்கு அதிகம்போல் தோன்றினாலும், உள்ளே இருக்கும் தொகுப்பைப் பார்க்கும்போது "இது ரொம்ப மலிவு" என்ற உணர்ச்சியே ஏற்படும் என்பதில் சந்தேகமில்லை.

## செல்வம் :

ஆசிரியர் க. சந்தானம். சக்தி காரியாலயம், ராயப்பேட்டை, சென்னை. விலை ரூபாய் ஒன்றரை.

திரு. க. சந்தானமவர்களின் "செல்வம்" ஏற்கனவே நம் இதழில் விமரிசிக்கப்பட்டது நேயர்களுக்கு நினைவிருக்கும். "செல்வம்" உண்மையில் தமிழ் இலக்கியத்துக்கே ஒரு தனிச் செல்வம்தான். 1946 டிசம்பரில் இரண்டாம் பதிப்பாக வெளிவந்த இந்நூல் இரண்டு வருட காலத்துக்குள் 1948-ம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் மூன்றாம் பதிப்பாக வெளிவந்திருக்கிறதென்றால் நீங்களே முடிவுசெய்து கொள்ளலாம்.

தமிழில் 'பொருளாதாரம்' போன்ற 'சிக்கலான' விஷயங்களை எடுத்துக்கூற முடியாது என்று வாதிடும் கோஷ்டி நம்மிடையே உண்டு. இதற்கு நேர் விரோதமாக "தமிழில் எல்லாவற்றையும்பற்றி சொல்லிவிட முடியும்" என்று வாதிடும் எதிர்க் கட்சியும் உண்டு. முதல் கட்சி ஆங்கிலத்தின்மேல் இருக்கும் பக்தியினால் அவ்வாறு கூறுகிறது. இரண்டாவது கட்சி தமிழின்மேல் இருக்கும் "பிடிவாத ராஜபக்தி"யினால் இவ்வாறு கூறுகிறது. திரு க. சந்தானம் இதில் எந்தக் கட்சியிலும் சேரவில்லை. ஒன்றுமறியாத பரம்பொருளைப்போல் அவர் "எளிசாக" விஷயங்களைச் சொல்லிக் கொண்டு போகும்போது "பொருளாதாரம்" என்ற தலைப்பின் பயம் துளிகூட இல்லாமல் முழுவதும் அகன்று போய்விடுகிறது.

செல்வத்துக்கும், பணத்துக்கும் இருக்கும் பேதம், முதல் போன்ற பல விஷயங்களையும் "சட்டியில் இருந்தாலொழிய அகப்பையில் வராது" போன்ற எளிய பழமொழிகளின் மூலம் விளக்கும் திரு. சந்தானம் நல்ல வெற்றி கண்டிருக்கிறார் என்றே சொல்லவேண்டும்.

## எல்லோரும் இன்புற்றிருக்க—ஜெயப்பிரகாஷ் :

கே. அருணாசலம் எழுதியது, சக்தி காரியாலயம், ராயப்பேட்டை, சென்னை. விலை ரூபாய் ஒன்று.

ஜெயப்பிரகாஷ் நாராயணன் அவர்கள் எழுதி வெளியிட்ட "Why Socialism" என்ற புத்தகத்தின் 'எதிரொலி' இது. அபேதவாதத்தின் அடிப்படைகளைத் திட்டமாகத் தெரிவிக்கும் இந்நூல் ஒரு வேகமான அரசியல் விமரிசனமாக அமைந்திருக்கிறது. "அபேதவாதம் ஓர் உயர்ந்த கைதேர்ந்த வைத்தியனாக நிற்கிறது" என்ற வாசகம் சுருக்கமாக அதன் லட்சியத்தையும், பாதையையும் விளக்குகிறது என்று சொல்லலாம்.

சமூகத்தில் ஏழை, பணக்காரன் என்ற பேதம் நிறைய இருக்கிறது. இதன் காரணமாக நிலவும் வர்க்கப் போராட்டத்தின் சாயலை இப்புத்தகம் தெளிவாக விளக்குகிறது.

"Where your treasure is there will thy heart be also" என்று சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் கூறிய ஏசு கிறிஸ்து அபேதவாதத்தை நவீன முறையில் துவக்கி வைத்தார் என்றே சொல்லவேண்டும். அபேதவாதம் "அழிவின்றி" நடைமுறைக்கு வரும் நாளை நாம் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

அபேதவாதம் இந்தியாவுக்குப் பொருந்தாது, அல்லது எந்த ஒரு தனி நாட்டுக்கும் பொருந்தாது என்று கூறுவோர் வெறும் பசப்பல்தான் செய்கிறார்கள் என்பது தெளிவு. அபேதவாதம் எல்லா நாடுகளுக்கும் பொருந்தும் என்பதுடன், வேலையில்லாமல் இன்று உலகத்தில் திண்டாடிவரும் கோடிக்கணக்கான மக்களுக்கு வேலை வாங்கித் தரும் திட்டமும் அதில்தான் அடங்கியிருக்கிறது என்றும் அழுத்தமாகக் கூறலாம்.

"எல்லோரும் இன்புற்றிருக்க" என்ற இந்த நூல் செம்மையான ஒரு சாஸனம் என்றே கூறவேண்டும். மக்கள் இதைப் படித்துப் பயன் பெறுவார்களென்றே எண்ணுகிறோம்.

## கோதாவரி

ஆசிரியை லக்ஷ்மி. சக்தி காரியாலயம், சென்னை 14. விலை அணா 6.

"கோதாவரி" என்ற இச் சிறு நூல் ஸ்ரீமதி 'லக்ஷ்மி'யின் பாடற் தொகுப்பு. இதில் "கோதாவரி" என்று மகுடமிடப்பட்டுள்ள நான்காவது பாடலே முதன்மைபெற்று நிற்கிறதென்று கூறலாம். ஸ்ரீமதி லக்ஷ்மி தமிழிலக்கியத்தின் பாடற் பகுதிக்கும் நல்ல இலக்கியம் சேர்த்து கொடுத்திருக்கிறார்.

சிறு கதை

சென்றவாரத் தொடர்ச்சி

# பிரதாப சிம்மன்

எஸ். பீ. ஹர்ஷன்

இவையனைத்தையும் எண்ணிப்பார்த்துக்கொண்டான் மன்னன். தனக்கும் மான்சிங்குக்கும் சிறிதுகூட வித்தியாசம் கிடையாது. "அவன் நாட்டைவிட்டுக் காட்டுக்கு ஓடாமலே நடக்கப்போவதை ஊகித்தறிந்துகொண்டு அக்பருடன் சேர்ந்துகொண்டான். நானே காட்டுக்கு ஓடி யுத்தத்தில் தோற்றது போதாதென்று என் லக்ஷியத்திலும் தோற்றுப்போய் திரும்பி ஓடிவந்தேன். மான்சிங், நீ மகா மேதாவி" எனக் கூறிக் கொண்டான்.

தீயை யொத்த தன் நாக்கை மடக்கிக்கொண்டு கதிரவன் மறைய ஆரம்பித்தான். பிரதாப சிம்மனின் உள்ளத்தில் புகைந்துகொண்டிருக்கும் கனலை அணைக்க முற்படுபவனை போல மான்சிங் அங்கே வந்து சேர்ந்தான். "யார்? பிரதாப சிம்மரா! அக்பரின் நந்தவனத்தில் உலாவ வந்துவிட்டாயா?" என்று கேட்டான் மான்சிங்.

பிரதாப் தலை குனிந்து கொண்டான். "இது அக்பரின் அரண்மனை என்று எனக்குத் தெரியாது. இல்லாவிட்டால் இங்கு வருவேனு" என்று கேட்டான். "நான் உன்னிருப்பிடத்துக்கு வருவேனே மாட்டேனே என்ற சந்தேகத்தால் இங்கேயே வந்துவிட்டாயா" என்று கேட்டான் பிரதாப்.

"அத்தகைய சந்தேகம் இருக்கத்தான் செய்தது. ஆனால் அதற்காக நான் இங்கே வரவில்லை. என் சகோவரி ஜோத்பாய் உன்னைப் பார்க்கவேண்டும் என்ற ஆவல் கொண்டிருந்தாள். அதற்காகவே என்னைச் சந்திக்கும்படி உனக்கு லிகிதம் எழுதியனுப்பினேன். என் ஒற்றன்மூலம் நீ இங்கேயிருப்பதை அறிந்து என் தங்கையையும் அழைத்துக்கொண்டு வந்தேன் என்றான் மான்சிங்.

அப்போதுதான் பிரதாப் மான்சிங்கின் பின்புறம் முக்காடிட்டபடி ஒரு உருவம் இருப்பதை உணர்ந்தான். பிரதாப் சிம்மன் தன்னைக் கவனிப்பதை உணர்ந்த ஜோத்பாய் தன் கைகளைக்கூப்பி 'நமஸ்காரம்' என்றாள்.

பிரதாபசிம்மனால் பிரதி வணக்கம் செய்யக்கூட முடியவில்லை "அம்மா என்னால் ஆகவேண்டியது ஏதாவது உண்டா" என்று கேட்டான். ஜோத்பாயின் அப்போதைய பரிதாபகரமான நிலையைக் குறித்து அவன் உள்ளத்தில் தோன்றிய பச்சாத்தாபம் அவன் குரலில் தொனித்தது.

"வேறொன்றுமில்லை, உங்கள் வீரத்தையும், சமாதானத்தை நாடி நின்ற அக்பருக்கு, நீங்கள் கொடுத்த சவாலையும், கேட்டு ராஜபுத்திரர்களுக்கே திலகமாகிய தங்களைக்காண விரும்பினேன். தங்களைத் தரிசித்துவிட்டேன்" என்றாள் ஜோத்பாய்.

"அம்மணி, ரஜபுத்திரர்களின் திலகமென என்னைக்கூறுகிறீர்கள் ராஜபுத்திர வம்சத்திற்கு விஷம் எனக்கூறுங்கள். குலத்துக்கு ஒருவனாகவோ அன்றி வம்சத்து ஒருவனாகவோ இருந்து அக்பருடன் போர் புரிந்து வீர சுவர்க்கம் அடையாமல் பேடியைப்போல நாட்டை விட்டுக் காட்டுக்கு ஓடி மனைவி மக்களின் பாசத்தால் அக்பரிடம் வலிய சமாதானம் செய்துகொண்டுவிட்ட கசடன் நான், அறிவிலி, குலத்துரோகி!"

"நிறுத்துங்கள். யார் கசடன்? யார் அறிவிலி? யார் துரோகி? அரசே மான்சிங் என்னை மனமுவந்து அக்பருக்குத் திருமணம் செய்து முடிக்க என் விருப்பத்தைக் கேட்டபோது நான் உங்கள் சகோதரியாகப் பிறக்காமல் மான்சிங்கின் சகோதரியாகப் பிறந்தமைக்காக என்னை எவ்வளவு நொந்துகொண்டேன் தெரியுமா? நீங்கள் ராஜபுத்திரக் குலத்தின் ஆணிவேர். காலதேவனும் அதிர்ஷ்ட தேவதையும் உங்களுக்கு ஓர் வஞ்சனை செய்கிறார்கள்..."

சிறிதுநேரம் அவர்களிடையே மயானத்தில் நிலவும் அனுமதி நிலவியது.

"ஜோத்பாய். மறுபடி ஆரம்பித்துவிட்டாயா. அக்பரைப் போன்ற ஒரு சக்ரவர்த்தி உனக்குக்கணவனாக ஏற்பட எவ்வளவு கொடுத்து வைத்திருக்க வேண்டும் தெரியுமா....? அன்று நீ அக்பரை நீசன் துன்மார்க்கன் என்றெல்லாம் தூஷித்தாய். ஆனால் உடனுக்குடனே உன் தவறை நினைத்து திருத்திக் கொள்ளவில்லையா?" என்றான் மான்சிங்.

"மான்சிங் நிறுத்திக்கொள். பால் நிரம்பிய குடத்தில் சொட்டப்பட்ட ஒரு எலுமிச்சம்பழ ரசத்தைப்போல வீரப்பால் நிரம்பிய ராஜபுத்திரக் குலக் குடத்துக்கு எலுமிச்சம்பழ ரசமாக அமைந்து விட்டாய் நீ." என்றான் பிரதாப் சிங்.

"அத்துடனாவது நின்றாயா? கானகத்திடையே பற்றி எரியும் மூங்கில் மரங்கள் அவை எரிவதுடன் அகிற் கட்டைகளையும் சேர்த்து தீக்கிரையாக்குவது போல, பிரதாபசிம்மரையும் அக்பருடன் சமாதானம் செய்து கொள்ளும்படிச் செய்யத் தூண்டுகோலாகிவிட்டாய். மொகலாய ராஜ்யம் என்னும் தீக்கு ராஜபுத்திர அதிபர்களை விருந்தாக்கி வைக்கிறாய்" என்றாள் ஜோத்பாய்.

மான்சிங் மௌனம் சாதித்தான்.

"சபாஷ் ஜோத்பாய், பிரதாப் சிங், உங்களிருவருடைய சமத்காரம் மிகுந்த வாக்குவாதம் வெகு நேர்த்தியாக இருக்கின்றது. பிரதாப் நீ சுத்த வீரன். ராஜபுத்திரர்களின் ஆணிவேர். ஜோத்பாய் ராஜபுத்திர வீரப் பயிருக்குக் களைபிடுங்கி, நீர் ஊற்றும் புனிதை.

"உங்கள் நாட்டுக்கு சுதந்திரம் வழங்கி உங்கள் நாடு இறந்த காலத்தைப்போலவே ராஜபுத்திர நாடாகத்திகழ இடம் கொடுத்துவிடுவேன். ஆனால் எனக்கு உங்கள் நட்புவேண்டும். ராஜபுத்திரர்களின் சிகாமணிகளாகிய உங்கள் நட்பினால் என் அரசாட்சி களை மிகுந்து விளங்க வேண்டும். இந்துக்களும் முகம்மதியர்களும் ஒரே சமூகமென வாழ்ந்துவரவேண்டும்" என்று சிறிய பிரசங்கமே புரிந்துவிட்டார் அக்பர். அமைதியையும், உல்லாசத்தையும் நாடி தோட்டத்துப் பக்கம் வந்த அக்பர் முதலிலிருந்து கடைசிவரை, பிரதாப் சிங், மான்சிங், ஜோத்பாய் மூவருக்குமிடையே நடந்த வாக்கு வாதத்தைக் கேட்டுக் கொண்டிருந்தார்போலும்.

காரியப்புலியான அக்பரின் வெளிப்போக்கான வார்த்தைகளைக் கண்டு அவரிடம் அடங்காக் கோபம் கொண்டான் மான்சிங். ஆனால் கற்பாறையிடம் கோபித்துக்கொண்டு, அதனை வாள் கொண்டு வெட்டினால் வாளின் கூர்மை மழுங்குமா? அன்றிக் கற்பாறைதகர்த்தெறியப்படுமா?

ஜோத்பாய், அக்பரின் கம்பீரமான உருவத்தையும், ஊடுருவிச் செல்லக்கூடிய கூர்மையான கண்களையும், புன்னகை தவழும் முகத்தையும் கண்டு, அக்பர் ராஜதந்திரம் மிகுந்த அரசர் என்னும் எண்ணத்துடன், முகலாயன் என்று குறிப்பிடக்கூடிய ஒரு துடுக்கனிடம் சாதாரணமாகக் காணப்படக்கூடிய அகங்காரம், இந்துமத துவேஷம் முதலியன இல்லாத ஒரு லட்சிய புருஷர் என்னும் எண்ணத்தையும் ஏற்படுத்திக் கொண்டாள்.

"சரியோ, தவறோ, என்னை மான்சிங் உங்களுக்குத் தாரை வார்த்துக் கொடுத்துவிட்டார். நான் உங்களுடைய அந்தப்புரத்தில் என் வாழ்க்கையைக் கழிக்கவேண்டியவளாகிவிட்டேன். ஒரு விஷயத்தை மாத்திரம் தாங்கள் நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். ஜோத்பாய், உங்கள் அழகில் மயங்கியோ, உங்கள் அரசாட்சிக்கு ஆசைப்பட்டோ உங்களைத் திருமணம் செய்துகொள்ளவில்லை. ராஜபுத்திரர்களின் அவமானத்தைப் போக்கிக் கொள்வதற்காகப் பணயம் வைக்கப்பட்ட அவள் ராஜபுத்திரர்களுக்காகவே உங்களைத் திருமணம் செய்து கொள்ள முற்பட்டிருக்கிறாள்" என்றாள்.

மான்சிங்கின் வாய் "நீ தானம்மா ராஜபுத்திரர்களின் வீரத்தாய்" என்று முணு முணுத்தது.

"என்னால் முடியவே முடியாது. ராஜபுத்திரர்களின் மானத்தை ஒரு பெண்ணின் வாழ்க்கையைப் பலிகொடுத்து

காப்பாற்றும் அவமானச் செயலுக்கு நான் ஒரு நாளும் முற்படமாட்டேன். ஜோத்பாய், நீ கலங்காதே! இந்த நீசன் அக்பரின் உடலைப் போர்க்களத்தில் சின்னா பின்னமாக்கி ராஜபுத்திரர்களின் மானத்தையும் உன்னையும் காப்பாற்றுகிறேன்" என்றான் பிரதாப்

அக்பர் சிரித்தார். பிரதாப் சிம்மனை வீரசிம்மத்தை, அடங்காத சிங்கத்தைப் பழக்கும் சர்க்கஸ் அதிகாரியைப் போல் பழக்கிவிடலாம் என்று உறுதி கொண்டார் அக்பர். வாளுக்கு எங்ஙனம் உறை அவசியமோ அங்ஙனமே தன் அரசாட்சிக்கும் பிரதாப சிம்மனின் நட்பு அவசியம் என்பதை உணர்ந்திருந்த அக்பர், பிரதாப சிம்மனை விரோதித்துக்கொள்ள முட்டாளா?

ஆனால், அக்பரின் பள்ளியறைத் தோட்டத்திலேயே, அக்பருக்கு முன்னிலையில், அவனுக்கு எதிராக பிரதாப் சிங் கூறிய அவ் வார்த்தைகள், பிரதாப சிம்மனைப் பற்றிய அவர்கள் எண்ணத்துக்கு மெருகிட்டுப் பள பளக்கச் செய்தது. கால வேறுபாடால் ராஜபுத்திரர்கள் முகலாயர்களுக்குப் பணிய நேரிட்ட போதிலும் அவர்கள் பிறவியிலேயே அவர்களுக்கு ஏற்பட்ட சிறப்புக் குணமான வீரத்தை இழந்துவிடவில்லை என்று எடுத்துக்காட்டினான் பிரதாபசிம்மன்.

அனுதாபக் கூட்டம்.

17—4—49 ஞாயிறன்று ஹிந்தி பிரசாரகர்கள், மாணவர்கள், அன்பர்கள் முதலானவர் கூட்டம் ஒன்று மலைவாசல் ஹிந்தி பிரசாரசபையில் ஸ்ரீ அவத்நந்தன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் ஹிந்தி பிரசாரசபையின் மாஜித் தலைவரும், போஷகரும், மானேஜிங்டிரஸ்டியும், காரியக்கமிட்டியின் அங்கத்தினருமான ஸ்ரீ ஸ்ரீனிவாஸய்யர் அவர்களின் மரணத்திற்கு அனுதாபம் தெரிவிக்கப்பட்டது. ஸ்ரீ சம்பத் ராவ், ஸ்ரீ எம். சுப்ரமண்யம், ஸ்ரீ ஜி. சுப்ரமண்யம் முதலியோர் அன்னாரின் திறமையையும் தாராள குணத்தையும் பொது நலப்பணியையும் போற்றிப் பேசினார்கள்



அறிக்கை

# தமிழ் வளர்ச்சிக் கழகம்

தமிழ் வளர்ச்சிக் கழகம் 1946-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 17-ம் தேதியன்று தொடங்கப் பெற்றது. தமிழில் பல துறைகளிலும் வெளியாகும் நூல்களில் சிறந்தவற்றிற்குப் பரிசு வழங்குவதும், அதற்கெனத் தமிழ் நாட்டில் முக்கிய இடங்களில் ஒவ்வோராண்டும் தமிழ்த் திருநாள் கொண்டாட ஏற்பாடு செய்வதும் அதன் ஒரு முக்கிய நோக்கமாகும். பரிசு வழங்குவதற்கென்று இலக்கியமும், அறிவு நூல்களும் பனிரண்டாகப் பிரிக்கப்பட்டு அவற்றில் ஆறு பகுதிகளுக்கு ஒரு வருடமும், மற்ற பகுதிகளுக்கு அடுத்த வருடமுமாகப் பரிசுகள் வழங்கப்பெறும். மதுரையில் நடந்த முதல் தமிழ்த் திருநாளிலே சிறுகதை; நாவல், நாடகம்; ஆராய்ச்சி; கட்டுரை; சரித்திரம் பொருளாதாரம், சமூக நூல்; பௌதீகம், ரசாயனம் என்ற ஆறு பகுதிகளில் 1946-ம் ஆண்டில் வெளியான நூல்களில் சிறந்தவற்றிற்குப் பரிசு அளிக்கப்பெற்றது. திருவாரூரில் நடைபெறும் இவ்விரண்டாம் தமிழ்த் திருநாளிலே 1. கவிதை, இசைப்பாடல் 2. கணிதம், வான சாஸ்திரம், இன்ஜினீரிங் 3. சிறுவர் 4 வைத்தியம், சுகாதாரம் 5. கல்வி, தத்துவம், மனத்தத்துவம் 6. இயற்கைநூல், விவசாயம் என்ற மற்ற ஆறு பகுதிகளிலும் 1946, 47-ம் ஆண்டுகளில் வெளியான நூல்களில் சிறந்தவற்றிற்குப் பரிசு வழங்குவதென வற்பாடு செய்யப்பட்டது. பரிசுக்கெனப் பல புத்தக வெளியீட்டகங்களிலிருந்தும், ஆசிரியர்களிடமிருந்தும் அத் துறைகளிலே மொத்தமாக 77 நூல்கள் வந்தன. அவற்றைப் பரிசீலனை செய்து தகுந்த நூல்களைத் தேர்ந்தெடுப்பதற்கெனப் பஞ்சாயத்தார்கள் நியமிக்கப்பெற்றனர். குழந்தை இலக்கியம் என முன்பிருந்த பகுதியுடன் பதினாறு வயது வரையுள்ள சிறுவர்களுக்கு ஏற்ற இலக்கியத்தையும் சேர்த்து அப் பகுதிக்குச் சிறுவர் இலக்கியம் எனப் பெயரை மாற்றி அமைக்கப்பட்டது.

மேலும் விவசாயத்தை இயற்கை நூலினின்றும் வேறாகப் பிரித்து இதை ஒரு தனிப் பகுதியாக்கவும் முடிவு செய்யப்பட்டது. நம் நாட்டில் விவசாயம் மிக முக்கியமான தொழிலாக இருப்பதால் அதைப் பற்றிப் பல நல்ல நூல்கள் வெளியாவதற்கு தனிப்பட்ட ஊக்கமும் உற்சாகமும் அளிக்க வேண்டும் என்னும் நோக்கத்துடன் அவ்வாறு செய்யப்பட்டுள்ளது. விவசாயத்தைப் பற்றி நல்ல நூல்கள் எழுதப் பலர் முன்வருவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

1946-47 ஆண்டுகளில் அச்சிட்டு வெளியாகி இரண்டாவது பரிசுத் திட்டத்திற்கென வந்த நூல்களில் 1. கணிதம், வான சாஸ்திரம், இன்ஜினீரிங் 2. இயற்கை நூல் 3. கல்வி, தத்துவ ஞானம், மனத் தத்துவம். 4. வைத்தியம், சுகாதாரம் ஆகிய பகுதிகளைச் சேர்ந்த நூல்கள் பரிசுக்குத் தகுதிவாய்ந்தனவாக இல்லை என்று பஞ்சாயத்தார்கள் கருதினர். ஆதலால் அந் நான்கு பகுதிகளிலும் கையெழுத்துப் பிரதிகளாகவே எழுதி அனுப்பப்பெறும் நூல்கள் பரிசுத் திட்டத்திற்கு ஏற்றவை, அவற்றைப் பரிசீலனை செய்யலாமென்றும், அதற்கு மூன்றரை மாதத் தவணை கொடுக்கலாமென்றும் அப் பகுதிகளில் 1948-ல் அச்சாகி வெளியான நூல்களையும் சேர்த்துக் கொள்ளலாமென்றும் 19/7/48 தேதி கூடிய நிர்வாகச் சபைக் கூட்டத்தில் தீர்மானிக்கப்பெற்ற இது விபரம் பத்திரிகைகளில் விளம்பரம் செய்யப்பட்டது. அவன் விளைவாகக் கையெழுத்துப் பிரதிகளும் 1948-ல் அச்சாகி வெளியான நூல்களும் வந்தன.

இவற்றையெல்லாம் பரிசீலனை செய்து உதவக் கீழ்க்கண்டவர்களைப் பஞ்சாயத்தார்களாக இருக்கும்படிக் கேட்டுக் கொண்டோம்.

கவிதை, இசைப்பாடல்.

திரு. ரா. பி. சேதுப்பிள்ளை, பேராசிரியர் சென்னைப் பல்கலை கழகம், சென்னை.

திரு. பாஸ்கரத் தொண்டைமான், டெப்டி கலெக்டர், திண்டிவனம்.

திருமதி கி. சாவித்திரி அம்மாள், சென்னை.

திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார் குற்றாலம்.

பேராசிரியர். கே. சாமிநாதன், சென்னை.

கணிதம், வானசாஸ்திரம், இனஜினீரிங்.

திரு ஜி. எ. சீனிவாசன், கணிதப் பேராசிரியர் மாகாணக் கல்லூரி, சென்னை.

திரு. ஆர். வைத்தியனாதசாமி, கணிதப் பேராசிரியர் சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.

திரு சங்கரநாராயண பிள்ளை பேராசிரியர், பச்சையப்பன் கல்லூரி.

சிறுவர் இலக்கியம்

திரு. ருத்ரப்பசாமி, ஆதாரக் கல்வி அதிகாரி, சென்னை.

திரு. எஸ். மீனாட்சிசுந்தர முதலியார், கலைமகள் கல்வி நிலையம் ஈரோடு.

திரு. க. அருணாசலம், தலைமை ஆசிரியர், காந்தி ஆசிரியர் பயிற்சிசாலை, பெரியநாயக்கன் பாளையம்.

வைத்தியம், சுகாதாரம்

டாக்டர். டி. எஸ். திருமூர்த்தி சென்னை.

திரு. அ. வேதரத்னம் பிள்ளை, வேதாரண்ணியம்.

கேப்டன். என். சேஷாத்ரி நாதன், சென்னை.

கல்வி, தத்துவஞானம், மனத் தத்துவம்

திரு அப்பளாச்சாரியார், ஆசிரியர் கல்லூரி, சைதாப் பேட்டை, சென்னை.

திரு வி. எஸ். தியாகராஜ முதலியார், திருவாரூர்.

திருமதி லக்ஷ்மி அம்மாள், பிரின்ஸிபல், லேடி வெல்லிங்டன் கல்லூரி, சென்னை.

திரு. ருத்ரப்பசாமி, ஆதாரக் கல்வி அதிகாரி, சென்னை.

விவசாயம்

திரு. எம். எஸ். சிவராமன், விவசாய இலாகா டைரக்டர், சென்னை.

திரு. ஓ. பி. ராமசாமி ரெட்டியார்.

திரு. கே எஸ். பெரியசாமி, ஈரோடு.

இயற்கை நூல்

திரு. பி. பானல், பேராசிரியர் பச்சையப்பன் கல்லூரி, சென்னை.

திரு. எம். எஸ். சபேசன், சென்னை.

அவர்களால் பரிசுக்குரியவை எனத் தேர்ந்தெடுக்கப்பெற்ற நூல்களும் அவற்றை எழுதிய ஆசிரியர்களும் வருமாறு:—

கவிதை, இசைப்பாடல் பகுதியில் திரு, எம். பி. சோமசுந்தரம் எழுதி ஸ்டார் பிரசுரம் பிரசுரித்த 'இளவேனில்' என்னும் நூலுக்குப் பரிசளிக்கப்பட்டது. கணிதப் பகுதியில் திரு. டி. கே. மாணிக்க வாசகம் எழுதிய 'வகை நுண்கணிதம்' என்ற நூல் பரிசு பெற்றது. சிறுவர் இலக்கியத்தில் திரு. பொ. திருகூட சுந்தரம் பரிசுபெற்றார். வைத்தியம், சுகாதாரம் என்ற பகுதியில் 'உயிரணுக்களின் உலகம்' என்ற நூலுக்குப் பரிசளிக்கப்பட்டது. கல்வித் துறையில் திரு. கே எஸ். நாகராஜன் பரிசடைந்தார். விவசாயப் பகுதியில் திரு. மு. அருணசலத்

(12-ம் பக்கம் பார்க்க)



# தேசீய பொருளாதாரத்தின் வருங்காலம்

தேசீய பொருளாதாரத்தில் ஏற்பட்டுள்ள இடைவெளியை சரிப்படுத்த பிரிட்டிஷ் கைத்தொழில்கள் அதிக ஏற்றுமதி என்ற இயக்கத்தில் இறங்கியுள்ளன. அதிக ஏற்றுமதி என்ற இயக்கம் வெற்றி அடைய வேண்டுமானால் கைத்தொழில்களும் பரந்த அளவில் விஸ்தரிக்கப்படவேண்டும். பிரிட்டனின் சம்பாத்திய சக்தியை—முக்கியமாக டாலர் வரவை—மிக அதிகரிக்க வேண்டியிருக்கிறது. ஏனெனில் டாலர்களைக்கொடுத்து தான் பிரிட்டன் தன் உணவுப்பொருள், மூலப்பொருள்களின் பெரும்பகுதியை வாங்கி வருகிறது. அத்துடன் ஐரோப்பாவின் பொருளாதாரம் சீர்படவும் பிரிட்டன் தன்னாலியன்ற உதவியைச் செய்யவேண்டியிருக்கிறது. ஐரோப்பிய பொருளாதார மீட்சிக்கான அமெரிக்க உதவி 1952 வருடம் முடிவடைவதால் அதற்குள் பிரிட்டனின் முயற்சிகள் பலனளிக்க ஆரம்பிக்க வேண்டும்.

பிரிட்டனின் மிகப்பெரிய இயற்கை ஆஸ்தியான நிலக்கரி உற்பத்தியை 1951 வருடத்திற்குள் மிக அதிகரிப்பதற்கான திட்டங்களுக்கு அரசாங்கம் சுமார் 145 கோடி ரூபாய் செலவிட அங்கீகாரம் பெற்றுள்ளது. சுமார் 30 கோடி ரூபாய் செலவழியுமென மதிப்பிடப்படும் 52 பெருந்திட்டங்களும் 1947 வருட முடிவிற்கு முன்பே ஏற்றுக்கொள்ளப்பட்டன. நிலக்கரி உற்பத்தியை அதிகரிப்பதற்காக 1947 வருடம் மட்டும் சுமார் 21 கோடி ரூபாய் செலவிடப்பட்டது. தேசீய நிலக்கரி போர்ட் தயாரித்துள்ள பெரும் அபிவிருத்தி திட்டங்கள் பூரணமாக முடிவடைய சுமார் 10 வருடங்கள் பிடிக்கலாம். என்றாலும் உற்பத்தியை தொடர்ச்சியாக அதிகரிப்பதில் வெற்றி கிடைத்து வருகிறது.

அடுத்தபடியாக பிரிட்டிஷ் உருக்குத்தொழிலை விஸ்தரிப்பதற்கான திட்டங்களும் தற்போது அமல் செய்யப்படுகின்றன. 1952 வருடம் வரை உருக்குத்தொழிலின் அபிவிருத்தித் திட்டங்களுக்கு 224 கோடி ரூபாய் செலவழிப்பதென 1945 வருடமே முடிவு செய்யப்பட்டது. தற்போது இந்த அபிவிருத்தி திட்டங்களுக்கு சுமார் 333 கோடி ரூபாய் செலவழியலாமென மதிப்பிடப்பட்டுள்ளது. இத்திட்டங்களில் பாதி தற்போது முடிவடைந்துள்ளது—அல்லது முடிவடையுந்தருவாயிலுள்ளது.

ஜவுளி, கம்பளி, எஞ்ஜினீரிங் முதலிய தொழில்களுக்கும் இதே விதமான அபிவிருத்தி திட்டங்கள் தயாரிக்கப்பட்டுள்ளன. இங்கட வடிக்கைகளின் காரணமாக உள் நாட்டில் சரக்குகளுக்குத் தொடர்ந்தும் பற்றாக்குறை இருந்துவரும். ஆனால் தற்போதைய இம்முயற்சி வருங்காலத்தில் சுபிட்ச மேற்படுமென்பதை ஸ்தரமாக்கிவிடுகிறது.

## வேலை தேர்ந்தெடுப்பது எப்படி?

கென்ட்டிலுள்ள கார்டன் பள்ளியில் பயிலும் மாணவர்களுக்கு பள்ளியை விட்டபின் எவ்விதமான வேலையை தேர்ந்தெடுப்பது என்பதில் இனி சந்தேகம் எழமுடியாது ஏனெனில் தங்களுடைய கேள்விகளுக்கு இம்மாணவர்கள் நவீன முறையில் தாங்களாகவே விடைகள் கண்டுபிடித்துள்ளனர் சமீபத்தில் இம்மாணவர்கள் நகரிலுள்ள மோட்டார் காரேஜ் மின்சார நிலையம், தபாலாபீஸ், தீயணைக்கும்படை, இதர பல தொழில் ஸ்தாபனங்களுக்கு நேரில் விஜயம் செய்ததுடன் போலீஸ் வாகனமொன்றில் ஏறிக்கொண்டு ரஸ்தாக்களிலுள்ள அபாய அறிவிப்பு சாதனங்களையும், போலீஸ்காரரின் அன்றாட அலுவல்களையும் பார்த்து வந்தனர். அதன் பின் வகுப்பில் இம்மாணவர்கள் ஒவ்வொருவரும் தங்களுடைய அனுபவங்களைப்பற்றி ஒரு குட்டிப் பிரசங்கம் செய்ததுடன் தான் பெரியவனானபின் எந்த வேலையை தேர்ந்தெடுப்பது என்பது பற்றியும் ஒரு வியாசம் தீட்டினர்.

## பிரம்பை உபயோகிக்க சிபார்சு!

தற்கால இளைஞர்களின் பிரச்னைகளைப்பற்றி தங்கள் அபிப்பிராயங்களை பரஸ்பரம் பரிமாறிக்கொள்வதற்காக வடகார்னிவாலிலுள்ள கிராமப்பள்ளிகளைச் சேர்ந்த மாணவர்கள் சமீபத்தில் ஒரு குட்டி 'பார்லிமெண்ட்' கூட்டினர். "இன்றைய பள்ளிக்கூடங்களில் மாணவர்களிடையே கட்டுப்பாடு என்பது மருந்துக்குக் கூட இல்லாமலிருப்பதற்கு" ஆசிரியர்களே காரணமென சில இளைஞர்கள் கடுமையாக குற்றம் சாட்டியதுடன் பள்ளிகளில் ஆசிரியர்கள் பிரம்பை உபயோகிக்க வேண்டுமென்றும் சிபார்சு செய்தனர். மாணவர்கள் வெளிநாடுகளுக்கு விஜயம் செய்வது அவசியமென்ற மற்றொரு தீர்மானமும் ஏகமனதாக நிறைவேறியது.

## பதினைந்து வயதில் 'ஸாண்டோ'!

பதினைந்து வயதுள்ள பில் கய்ரா என்ற ஸ்காட்டிஷ் சிறுவன் பாரம் தூக்குவதில் சமீபத்தில் புதிய 'ரெக்கார்டு'களை ஏற்படுத்தி யுள்ளான். சுமார் ஒரு வருடத்திற்கு முன்னர் தான் இம்மாணவன் பாரம் தூக்குவதை பழக ஆரம்பித்தான். சமீபத்தில் நடைபெற்ற ஒரு போட்டியில் இம்மாணவன் 220½ ராத்தல்நிறையை தூக்கி புதிய ரெக்கார்டை ஏற்படுத்தினன்.

## நகரை சுத்தமாக வைத்துக்கொள்ள

கெண்ட் மாகாணத்தைச் சேர்ந்த கில்லிங்ஹாம் பள்ளி மாணவர்கள் தங்களுடைய வார விடுமுறைகளை நல்ல வழியில் செலவழிப்பதற்காக தோட்டவேலைகள், நகரை சுத்தமாக வைத்துக்கொள்வது சம்பந்தமாக விசேஷ பாடங்களை படிப்பதில் அதிக கவனம் செலுத்துகின்றனர். வார விடுமுறைகளின்போது இம்மாணவர்களில் அநேகர் நகரை சுத்தமாகவைத்துக்கொள்ளும் வேலையில் ஈடுபடுகின்றனர். மற்றும் சிலர் தங்கள் ஊரிலுள்ள பார்க்குகள், தோட்டங்களுக்குச்சென்று செடிகளை கவனிக்கின்றனர்.